உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-சாந்தலிங்கசுவாமிகள் அருளிச்செய்த

# கொலைமறுத்தல் மூலம்.
# வைராக்கியசதகமூலம்.
# வைராக்கிய தீபமூலம்.
# அவிரோதவுந்தியார் மூலம்.

ஸ்ரீ-சொரூபானுபவசுவாமிகள் அருளிச்செய்த

# சொரூபவுந்தியார் மூலம்.

இவை

சமிவன க்ஷேத்திரமென்னும்

கோயிலூர் ஸ்ரீமுத்துராமலிங்கசுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ - இராமசாமிச் சுவாமியவர்களால்

பலருடைய வேண்டுகோளின்படி

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

சென்னை:

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

பராபவஹு ஆடிமீ 1906.

இதன் விலை அணா 4.

இரண்டாம்பதிப்பு.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கொலைமறுத்தல் மூலம்.

## பாயிரம்.

இன்பமாயதரு திடையோங்கவுந்
துன்பமாயது தூரத்துணீங்கவு
முன்பராபரன்மொய்குழலோடணைந்
தன்பீனீன்றவோரானையைப்போற்றுவாம்.

திருமலிபூமகனுதியை வருமாமொருபரமிச் சிறியனேற்கும், தருமிருதாடலைமிசைக்கொண் டஞ்சினர்நீக் கறங்கொலைமைதள்ளிச்சார்தற், கருமறையாகம நெறிச்சொற் பொருளமைத் திக் கொலைமறுத்த லறஞ்சொன்மாண்பா, ணிருமுணர் விலேனுளாயு நலந்தருமென் றுளந்துணிந்தீண் டியம்பாநின்றேன். (க)

எடுத்துள வெச்சமயிகளு முலகருஞ் சாரோரவையி னிடையிற்றோன்று, முடுத்தனைச்சூழ் தரவிளங்கு மதியினுயர் சைவரைவந் தொருவன் றாழ்ந்தீண், டடுத்தபலவுயிர்த்தோற்றத் துயர்வுதாழ்வருளுகென வவனைத்தேற்றித், தடுத்தபுறச் சமயிகட்குத் தாமுறுத்தி நிறுத்துகின்றார்தம்பாலூற்றம். (உ)

ஊற்றமிகுஞ் சராசரத்து ளுயர்ச்சிசரஞ் சரத்துணரார் நரர்தம்முன்னு, மேற்றமுந் தாழ்ச்சியுமுள பல்லுயிர் செகுத்துண்டலைவளர்த்திடுங் கீழம்மேல், சாற்றுமுயிர்க் கொலை புரிதறுயர் நெடுநோ ளென்று முடறான் பொய்யென்றுந், தேற்றமிக் கென்றுயிர்தமைவீட்டினுமவற்றினுயிர்புரக்குந்தீதிலோரே.

தீயவினைத்தலைகொலைமா துயர்தரும்பின் புண்மைசொ
ன்றாறெரித்தவாற்றீ, டாயவோரோவினைகளிகத்திறு முற
லாற் பலமருந்தற்கங்கோரங்க, மேயுமதிற்பாயுமிதி லறிவு
ருவே றிவண்புகலு முளதியாமுங், காயமிது கிடப்பமற்றோ
ருடல்கனவிற் றினம்புகலோர்காதையன்றே. (ச)

காதறருமுருவிதுவான் பறத்தலின்றுங் கதற்கியல்பாய்
க்காண்டலானும், போதுறைவோ ஞறியர்கண் முகமாதிகன
விலியாம் பொருந்தாதானு, யோதுமினைவலவுணர்வா ருயிர்க்
குணமிவ்வுடல்பிணைத் தொன்றுணரக்காணேம், வாதமுளதி
லையுறக்கத் துணர்வுணர்வ துயிரெனக் கொண் மதித்தேசில்
லோய். (ரு)

தேசிறைமாநுடர்க்கெவையு மருளினுண்டீக் கீடமையெ
ன்செய்வாய் மாந்தர்க், காசருள்வதேனை வேங்கையாதியச்
சாதிகளவர்சொற் கடங்குமாறென், காசடைந் திம்முறையு
மோரோர்காற்றிரிவதெனைமுனஞ் செய்கருமந்தன்னாற், பேசு
மசாதி யுருவுயிர்க ளூறலுண்மை யுன் சொற்பிழையாமன்
றே. (சு)

பிழையுறுதல் சிறிதசரக் கொலையதனாற் சரக்கொலையிற்
பெருகாதிங்ங, னிழிவுதரும்பருவ மடைதலினாற் கீராதியை
ந்துமீயுந்தூய, வழகியவானூனயின்றோன் கீழென மேலாவர்
குறைந்தடைபாவத்தான், முழுமலப்பன்றியை யருந்தும் புலை
யர் பன்றிக் குறும்பருவமுறையினுமால். (எ)

முறைமைதெரி யந்தணரும் புலையரு மாநுடரெனலின்
மொழிந்தவானுஞ், செறிமலப்பன்றியு மிருகமெனப்படு மாங்
கவர் கொலையிற்றிகழாதிற்கு, நிறைவினெடு குறைவெனவான்
பன்றியிவற்றருங்கொலைக்கணிகழும்பாவ, மறிஞரிவையெனக்
கொலையைசரமதிற் குறைதருமென்றறைவரன்றே. (அ)

அன்றியுந்தாவர வுருவஞ் சரமதுபோற் குறைப்பினுயி ரகலாபாவங், குன்றியுறலுண்மையவை குருவாதிக்களித்துண வக்கொலைமைதன்னோ, டொன்றியுழவாதியிற் சார்பாவமுந் தேய்ந்தழியுமன்னோர்க்கூட்டொணாதா, னன்றறிகண்ணப்பரி னம்பனைச்செருப்பாலுதைப்பதெவனலமில்லோயே. (கூ)

நலந்தருதாதையை வதைத்து முத்திபெற்றோருளரெனி லிஞ்ஞாலத்தூடே, கலந்துமுத்தியடையுநர்க்கெல்லாமதுவோ கதியுலகங்கடந்த பத்தி, வலந்தனை நீவிதியெனக்கூறுதல் பழு தூன்றனையிமயவரைமாதுக்கிங், நிலந்தனிற் பத்திரை முத லாஞ்சத்திகட்கும் வரைவெனினீநிகழ்த்தறிதே. (க0)

தீதிலசத்திகட்சூழ்ந்தோ ரிடமூ ஞண்டமாரன்றிச்செறி பூதாதிக், காதலின்மற்றவையுணலானகலினுமக்கொலைமைமு ழுதகன்றிடாவான், மீதலத்து மசுரரிராக்கதரு முண்பருன தனைவிரும்பாரென்றுஞ், சோதிமணிமுடி யமுதாசனர் சுரந் தன்மையினாற்பூசுரரைப்போலும். (கக)

பூசுரருக்கிழிவிலை யாகத்துயிர்கொன் றருந்தலின்விண்பு குதாநிற்பர், கோசமெடுத்துரைநவிற்ருசிரியர்சிறூர்க்கிதமது பின்கொடுப்பான் முன்ன, ராசுமிகுதுயர்விளைத்து மிதமது வாப் பொருள்பெறலி னறியவேத, வோசைமிகுமமருலகை யவர்வதைத்தசீவனும்பெற்றுய்தலாலே. (கஉ)

உய்ந்திடுமெம்மகத்தவி முன்பரன்கொளலா னவ்வூன்றூய் துறலாற்சுத்தி, தந்தமறை மந்திராற்றழல்விடங்கெட்டுருவி ருக்குந் தன்மைத்தவ்வூ, னிந்தடைவுபுரியவுனக்கிருமறை கூறுதியற்றற்கியம்பாநிற்கு, மந்தவுரையிறைமொழியன்று ரணத்துக்கதுவிருத்தமாகையாலே. (கங)

ஆகியவெக்கலைத்துணிவு மவற்றுளவற்றுள தெவற்றும டங்காதாத, லேகனுரைமறையாதி யியம்புமவற்றுளதிழுக் கென்றெவர்க்குஞ் சித்தி, வாகுறவுண்டதைமதியே லருளா ஞகமவேதவழி வந்தோர்க்குண், டோகைதரும் பிரமசித்தி யொழிந்தவையுமவர்க்கெளிதென்றுளத்துட்டேரே. (கச)

தோர்ந்திலைகொல் கீழினொடு சேர்வதெளிதுயர்மனையுஞ் சேரக்கிட்டா, சார்ந்திடின் வேண்டியதருமாற் றனைத்தரு மெம்மிறையுமிவண்டனிற்சார்வாய்ப்பின், பேர்ந்திடுமெண்க ருமிகள்சார்வுன்னதுலோகிதன்மகிழும் பெரியோய் ஞானங், கூர்ந்தவர்வான்சிறப்பெனினுங் கொலையின்வருமெனிற் கடை யாக்கொள்வரன்றே. (கரு)

அன்றழற்கொப்பறிஞரொதிருவினையைச் சுடுதலினலன் றியாதுந், தின்றன்மருளருளினர் வீட்டமுதுள நீராடியுண் போர் திகழ்தீத்தானுய்க், கன்றியெரிக்குதல்விலக்கவிலவூனிற் சிலவிலக்கிக்கசிந்து நீயோ, ரொன்றருந்தலெனை யொருவன் றாவுணி னூன்கொலைதடுத்தாண்டுரைத்திடாயால். (கசு)

உரைத்துமுருபயங்கொலைசெ யொருவனைச் சார்ந்தவ ற்குநரகுளமண்ணுள்வோ, னிருத்தறையிற் பொருடிருடே லெனக்கவர்வோனொடுந்தமர் வீய்ந்திடலிற்றுனுய், மரித்திடி னுமகத்தலதூன் றினலருளன்மையிற்றுயர்பின் மறலிதூத, ருருத்தன்பெயிக் கலியின் மருந்துயிருயுங்கண் டிதியிவற்றா னருந்தறீதே. (கஎ)

அருந்தனயன்றனைமனைதோன் பிறர்க்கீந்தும் பெறுவத ழ கக்காலிக்காற், பொருந்துமதோ விக்கலியீடுணர்ந்தன்றே தமதாசாற் பூசித்தன்னேன், றிருந்துமனைபதங்கையாற்றீண் டாதர்ச்சனைநாளுஞ்செய்தார்மை தீ, ரிருந்தவருநீமலத்தைமல த்துளமென்றுணினூனுக்கிடுதியூனே. (கஅ)

ஊனுணுஞ்சாதிகண்மிருகாதிக ளறம்பூண்டவையுளுமு
ன்பொழுகிற்ருனீ, தானெனவூன்றினல்பழுதோரிழிவுபிதாப்
புரியின்மைந்தர் தாமுஞ்செய்யார், மாநிலத்திற்பாலர்பித்தர்
தெளிந்துமிழுக்கியற்றினுண்டோர் மறுக்கொணுது, ஞன்ம
விச்சைகருதி முறையல்லாரைத் தோய்ந்துறினூனருந்தல்செ
ய்யே. (கக)

செய்துயிர்கட் கினிமைகொல்லாநோன்பியற்றும் வேலை
குருசேவைதன்ஞன், வையகத்தூடறுமறியாக் கொலைமைய
தூன்மக்களொடுன்மனையுண்டாலு, முய்வதிலை நீ யெவணம்
வேறிதற்குன் மனைபிறர்த்தோய்ந்துறினக்காலைக், கையகல
விடுவதன்றிக்கொலவு முளந்துணியுமதிகாரத்தாலே. (உ0)

தாலமிசையுனது சுற்றத்தவர் கொலைமை செயினுனக்கு
ஞ்சாருநீவே, றேலுனதுகுலநெறியை விடிலவரோடுரைபக
ராதிகழ்ந்தன்னோர்தம், பாலுணவாதிக டவிர்வதெனை யது
போன்மறம்புரிவோர் பற்றைநீத்துண், மாலதனுற்கொலைமை
யறவறம்புரிவோர்தொடர்பு றி னல்வழிசார்வாயால். (உக)

சார்வொழி கொம்மடியாதிதாவரத்தூ னுறழ்தருநாய்த்
தன்மையோரை, நேரலைநீகேண்முடிவில் வரும்புரம்பொய்
வீணுளா நீக்கேல்வாணுள், பார்மிசை நீ புரியலைமெய்த்தவர்
குழுவுற்றறமவர் சொற்படிசெய்நாளுஞ், சேருமனேசுத்தி பர
ஞானமுற்ருனடைவைமுத்தித்திருநாடன்றே. (உஉ)

கொலைமறுத்தல் - முற்றுப்பெற்றது.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வைராக்கியசதக மூலம்.

---

## பாயிரம்.

முக்கணிறைதருகரியை முன்னடத்திப்பின்னதன்ருட்
பக்கமறைந்தேகுநர்வெம் பாசவிகளுசமுற
மிக்கவமர்விளேத்திளேயா வீரரெனப்பூரணனூர்ப்
புக்கிணையில்பரானந்தப் பூவையையுமேவுவரால். (க)

வேறு.

அம்பலவாண னடியிணை தொழுவார்க்
கின்பமும்வீடு மெளிதினில்வருமே. (உ)

சிம்பசிழற்களி, றம்பொன்மலர்த்தாள்
நம்புதுமுத்திக, லின்பம்வரற்கே. (௩)

சமரபுரிக்குகன் விமலமலர்த்தாள்
எமதுளம்வைக்குது, மமலமறற்கே. (௪)

வேறு.

மறைமுடியதனில் விளங்கிடுமொளியே மனிதரைப்போ
லவந்தெனது, சிறைதவிர்த்தாண்ட சிவப்பிரகாச தேசிகன்ற
ன்னேமற்றவன்ற, னறைமலரடியைப்போற்றிடுஞ்சாந்த நாய
கன்றன்னேமற்றவன்ற, னிறையருள்பெற்ற பழனியாமுனி
யைநெஞ்சினுளிருத்தியேபணிவாம். (௫)

வேறு.

போந்தெழுயிர்க்குயிராந்துணையொத்த
சாந்தையர்தம்பதமேந்துகருத்தே. (௬)

பாயிரமுற்றிற்று.

---

## நூல்.

வாழிநெஞ்சமேசென்றிடேனின்றிதோர் வார்த்தையெற் குரைசெய்வாய், கிழியாமியற்றுயர்தவத் திவ்வுடல் கிடைத் ததன்றேமற்றீ, தூழிகாலமிங்கிருக்குமோ நீயுமோர்ந்துளே யெனினுளபோழ்தே, சூழுமேழ்பவந்துடைத்தல் செய்யாயி தென் ரெழுதரன்றுணைத்தாளே. (க)

தாளையேதர மறிகிலாதெமக்கெளி தருசிவப்பிரகாசற், காளியாமெனத்திரிந் தவன்பணிபுரிந் தரியவீடடைகில்லாய், கேளையோமனை யாதியவளற்றிலே கிடந்துழைத்தனை நெஞ் சே, நாளையோலையுந் தூதரும்வரினிவர்துணைகொலோ நவில் வாயே. (உ)

நவிலினிம்மனை மக்களுக்கொருதுணை நாமலதிலையென் றே, கவலையுற்றரன் றுண்மறந்தனையுனைக் காலனூர்கொடு போயிற், குவலயத்தடைந்திவரை நாடொறும் புரந்திடுவை யோகுறிக்குங்காற், சவலைநெஞ்சமே சிவனலாதுயிர்க்குயிர் தானுமோர்துணையாமே. (ங)

துணையதாயெமைத்தொடர்தருதொடர்பரன் றெல்கழ றுணையல்லா; துணைவுசெய்தடுமிகலதஞ்ஞானமென் றுள்ள வாறுணராய்மற், றிணையினெஞ்சமே பகையிவருறவிவரென வினைவழியேவந், தணைவசிவவரையுனிமுனிவாதிய வடுத்தெ னைக்கெடுத்தாயே. (ச)

கெடுவதாம்பொருள் செல்வமேபல்வகைக் கிலேசமற் றதுதன்னை, விடுவதேசுகமெனவுமோர்ந்திலமுனம் விடுத்து ளோர்க்குனைப்போறு, நெடியயுகமதில்லையோ சொல்லுதி நெஞ்சமேயினிப்பற்றற்,றடைதுமேலர னருளேயேபொருளெ னவருஞ் செல்வமதுதானே. (ரு)

தானொருழமண் ணுலகையாண்டழிபவர் தங்கள்வாழ்வி னிதென்றே, நீநினைத்தியோ நெஞ்சமேயெஞ்சுறா நிமலஞா னமதுற்றால், வானும்வையமும் வந்துதாள் வணங்குமெய் வாழ்வுகாண்டலும்வீண்முற் போனநாட்கிரங்கவும் வருமென நலோர்புகன்றதோர்ந்திலைகாணே. (சு)

காணியீதெமதிடமிதுவெனமனைக் கருதிமண்ணுகின்றா ய், நாணிலாய்மட நெஞ்சமேயுடலிது நமதிடமலவென்றாற், பேணவும்படுமே யிதற்கிடமதாம் பிருதிவிதனைநாகப், பூணி ஞன்றிருச்சரணமேயுயிர்க்கெலாம்புகலிடமதுதேரே. (எ)

தேர்கிலாயிவண் புகழ்விழைந்தனையினித் தேகம்வேற டைந்தாயேற், சாருமோவதிலிதிற்புகழலதுநீ தானுணர்ந்தி லொயோ, பேரியாதியாமூர்கொன் முற்பவத்திகழ் பெறினு மத்துணைநெஞ்சே, யோரினேரில் வீடுறுதலேபுகழிக முறல் பிறப்பெனவுன்னே. (அ)

உன்னுகின்றனையுனைமனோர் பெரியனென் றுணருமா செயவுன்பான், மன்னுமீசனேபந்தம் வீடளிப்பவன் மற்றை யாறிந்தென்னு, மன்னவன்றிருப் பொன்னடிகரியதா வருந் தவஞ்செய்நெஞ்சே, பின்னைமுன்னவ னுலகறிந்திறைஞ்சுமா பெருமைசெய்குவனேரே. (கூ)

ஓரினுள்ளமே பாரின்மாநுடர்முத லுளவறுபிறப்பூடுஞ், சேருமின்பமொன்றில்லையென்பதுபிரத் தியக்கமா நீவல்லா ய், போர்களாதிதுன் பிமையவரடைவதும் புகலநூலுணர்ந் தாயே, நேரிலாவரன் கழலலான் மிகுசுக நிலைபிறிதிலையன் றே. (கo

அன்றெனக்குநீ யொருதுணை பிறப்பிறப்பதிற்றுயரமுங் கேடுந், தின்றலொன்றலால் வியாதியாதிகளினுற் செறிதுய

ரமுமோர்ந்தோர்ந், தென்றுமேழ்பவக் கஞ்சிலே நெஞ்சமே யின்பவீடெதுவென்றே, நின்றுநின்றழுதிலே தொழுதிலேசிவனேசர்தாள்பூசித்தே. (கக)

பூசைசெய்து தோத்திரஞ்சொலித்தனேரினே புண்ணியர்பானண்ணற், காசைசெய்திடுமம்பலக்கூத்தனே யடைகிலேய டைந்தாரிற், பேசுகின்றனேயறவரின் விளங்கினே பிறர்மனே நயக்கின்ருய், சீசியிங்கிருந்தென்செய்தாய் நெஞ்சமே செத்திலாய்கெடுவாயே. (கஉ)

வாயினுற்பல நூல்படித்துணர்ந்து நல்வழிபிறர்க்குரைசெய்து, நீயுலோக வாசாரமோரணுத்துணையானு நீங்கிலேநெஞ்சே, தூயதாமிவண்பிறர்கொளக்குங்குமஞ் சுமந்துசெல்கரமுன்னிற், காயமாநுடத்தின்றதற்கன்றியுட்களவு மின்மையினுலே. (கங)

நாலுவேதமு மொருசமநிலேசொல நவைசெயீரவத்தைப்பாற், கோலுமூவிருசமயமாகியபடு குழியினூடிழிகின்ருய், வேலேயாவுனக்குடறருவிதி யுறவையு மதைவிடுவிக்குங், காலனுர்தொடர்பையுமினந்தொடருதிபோலுநீ கடைநெஞ்சே. ()

நெஞ்சமேயுட லந்தமாதியைவிடார் நிற்க மற்றையர்க்கெல்லாம், வெஞ்சமற்குதிப் பரிதிவைக்கொருமிரு கண்டுபுத்திரன்சான்ரு, லஞ்சலிவ்வுடற்கிறுதியிப்பொழுதென வறியொணுமையினுளுந், தஞ்சமென்றரன் சரண்விடேலியாமுமச்சமன்வலிதடுப்பாமே. (கரு)

தடுத்துமேலுமிவ் வுருவமாயினும்பெறல் சற்றலமறைநாகத், திடத்தின்மாதவ ரிருவர்கங்கெனவடைந் திருத்தல்சான்றரிதாகிக், கிடைத்ததேகமும் விவேகமுமிருக்குளான்

றேகிரசனொநஞ்சே, யடுத்திலாய் பலகவலைமாய்த்தோருணர் வாகிநின்றகலாதே. (கசு)

அகலுமிவ்வுடன்மின்னின் விரைந்தெனின்விரைந்தரற்றொ ழிதலிங்கே, சகலமுஞ்செயநினைகுதறனையினித் தடப்புன லிதுவென்றே, பகலினல் விரிகானலைநெஞ்சமே கருதிநெற்ப யிராதி, யிகலினற்செய நினைபவர் நினைவையொத்திடுமென விடுவாயே. (கஎ)

வாய்மையீதுணர்ந்திடுதி நன்னெஞ்சமே வருகணத்தே தேனு, நீநினைந்திடேலவ்வளவுடலுற னிச்சயிப்பரிதத்தாற், போயதோர்கணச்செயலுனேல் பயநில புகனிகழ்கணத்தே னுந், தீமைநன்மைநீ நினைவதென்வினைவழிச் சிவன்றருகுத லாலே. (கஅ)

தருவதீமையி னன்மையுமூழடுத் ததையுயர் கழைமேனி ன், றுரைகளாதிசெய்கூத்தரிற்பிறனைநச் சொருமகடவனே வல், புரிதறன்னினைம்பொறிகளாற்பற்றிலும் புகனிராசை யைநீயுற், றிரவினும்பகலினும் விடேனெஞ்சமே யின்பவீடெ ளிதாமே. (கக)

ஆமனிச்சையேமேலுமேலும்பிறப் பளிக்கும் வித்தென நெஞ்சே, நீமறித்திடாசைக் கடல்சுவறுமே நினைவெனுந்தி ரைமாயும், போமிறந்தெலா நினைவுமெப்பொழுதிலப் பொ ழுதுபூரணமாய,சோமசேகரத்தெந்தை பொற்கழலையுந்தொழ லையடைலநாமே. (உ0)

நாமரற்கருச்சனை முதலியகொடுநலஞ்செய்தே மவையி ன்றித், தீமைசெய்துளே மெனவு முன்னிலையொருசிறிதசை வடைந்தாலும், யாமியற்றபாதமென்னினைவுமற்ற சைகிலை யெனிநெஞ்சே, யேமமிக்குறச்செய்யுநன் கிறைகழற்கெனத் துணிந்திடுநீயே. (உக)

நீமெய்ஞ்ஞான நன்னிட்டைசாருதலரிதெனவு நெஞ்சக மேசற், ஞேய்விலாது செய்தியானமாதிகளெளிதெனவுமுன் ஞனின்ருய், சேய்கடம்மினத் தாய்கொல் சும்மாவிருக்குதல் செயற்கரிதாகிப், போயுழைப்புனக்கெளியதாயிருந்த வப்புது மையென்புகனின்றே. (உஉ)

நின்றுருதலைகுதல் விருப்புனக்கதை நீத்திருக்குதனெ ஞ்சே, யென்றனக்குநல்விருப்புவாளாவிவ ணிருத்தறீ துயர் வீடு, சென்றுகாண்குவலென நினைந்தலைதியோ சிவன்றிரிசய மன்ரு, லொன்று நீயுஞதிருப்பதேயதைத்தொட ருபாயமே ன்றறிகண்டாய். (உந)

கண்டவைம்புலக்காட்சிபோய்க் காட்சியாற் கலந்தவா தனையாவும், விண்டுமூடமற்றலையிலாக்கடலென விளங்கினை யெனிநெஞ்சே, யுண்டுகொன்னமக்கொரு துயராங்குவீடுள ங்கையிற் கனியேயாம், பண்டைமேவியபயமெலாமறுங்குரு பதத்திலும்புகலாமே. (உச)

புகலரும் பரப்பிரமமாங்கடறனிற் புணர்பரைத்திரையீ சன், சகமொடாருயிரெனுநுரையாதிக டந்துமாற்றிடுமென் றே, பகருநான்மறையெனின திலெதையெதைப் பற்றுவாம் விடுகிற்பாஞ், சுகசொரூபமே யனைத்துமென்றகற்றுதி துவித பாவனைநெஞ்சே. (உரு)

நெஞ்சமேயினிப்பாவனுதீதமாய்நின் றிடின்றெனி னிற் பா, யெஞ்சுருதகல் புரணபாவனையையோர்ந் திலையெனினு லகெல்லா, மஞ்சனக்களன்மேனியென்ருேர்ந் திலையெனி னருள்சுரந்தெம்பால், வஞ்சமற்றிடும்படிக்கிவணடைந்தசோர் வடிவையோர்ந்துய்வாயே. (உசு)

உய்துநெஞ்சமே வாக்கினைமௌனமாக்கிலையெனினுள தேசொன், மெய்தருஞ்சொலும் பொய்நயம்பயக்கிலா விட்

த்தின துடைத்தேனும், பொய்தருஞ்சொலி யான்செய்தேன் பிறர்செய்தாரெனினவைபோனாலு, மெய்தருஞ்சிவ மன்றி தென்றொன்றைநீ யிசைத்தல்பொய்யெனத்தேரே. (உஎ)

தேரினிவ்வுடல் சமாதியிலசைவறச் சித்திரதீபம்போற், சாரவைத்திடஃதில்லையேற்குருபரன் றனதரும்பணிமேற்கொண், ணொருமூழ்வழிதொழில்பிறிதடையினு நெஞ்சமேயுயிர்க்கெல்லாம், பேரிதஞ்செய்வித்திடு முடைகெழுமலப் பிணக்கிதஞ்செய்யேலே. (உஅ)

செய்யு ந்தொழிலைந்தொழிலி யாமுமச்சிவனதுவடிவெண்றே, யையமற்றுணரா தியானெனுஞ் செருக்கடைந்துநாடொருநெஞ்சே, நைவதென்னை நீ பஞ்ச கோசங்களு நாமலவெனுவுண்மை, கையிலாமலகம்மெனவுனக் கியான் கழறியுந்தெளியாயே. (உகூ)

தெளிவுயிர்க்கரன்விளக்குதன் மயக்கவன்றிரோபவிக்குதறேசம், விளிவையுற்றல் சங்கார மிங்கிதாகிதமேவுதறிதிதோற்ற, முளசிருட்டியேலம்பைநோதலினுன்னையும்பிறரையுநாடித், தளர்வதும் மகிழ்வதுமடைந்துள்ளமே சம்புவைமறந்தாயே. (௩௰)

மறைத்தலுநினைத்தலுஞ்செயுமாணவமாயைநின் றவைதம்மைத், துறத்தலே யிராப்பகலகல்வீடெனச் சொல்வரத்துறவெய்தக், குறித்திடிற்பரபத்திஞானத்தினாற்கூடு மற்றவைநெஞ்சே, நிறத்தபத்திநஞ்செயலறினுமறினின்றமற்றொன்றுமே. (௩க)

ஒன்றுநஞ்செயலில்லை நெஞ்சேயிவனோர்மயலதனாலே, சென்றுசென்று வெம்பவக்கடன் மூழ்கி னஞ்செறிமயலேதென்ன, நன்றுநீவினாவினை யிருவினையையு நான்செய்தேனெனு

மான, மென்றறிந் திடைதொன்றையு மாற்றினையெனினுனக் கிணையாரே. (கூஉ)

இணையின்ஞானபூரணன் முழுதுணர்ந்தமைத் திட்டவா றலதிங்கே, யணைவுறுதொருநீ தெமக்கவன்றரி ஞர்தடுப்பவர் நெஞ்சே, பணைகொடாவரமானமின்மையினுருப்பற்றிநின்றில கொல்லோ, வுணைவுறு துடற்காவல் கைவிடுதி யூழுள்ளவா விடாதென்றே. (கூகூ)

என்றும் வீடடைந்தவரிறுமாக்கயானிறப்பை விட்டகலா ம, னின்றுதான்றலைசாய்க்கவோநெஞ்சமே நினைத்துணையா க்கொண்டு, நன்றுநீயிதற்கென்செய்கேன் சாவனோ நானென லிலையாறு, லொன்றுசெய்மலக்குடிலிதிலவாவைநீக் குமாப திதரும்வீடே. (கூச)

வீடுகூட்டுவான் குறித்ததினிமித்தமா விமலனீதலினம் பாற், கூடுமாயையையெனதியானெனவெணிக் கொள்வதெ ன்பயமாசை, நாடுபோழ்திவை சுழுத்தியிற் புரந்தவனெவன வனனவாதி, யூடுமூழ்வழிபுரப்பனென்றுள்ளமே யுடல்கை விட்டிருப்பாயே. (கூரு)

இருப்பைநாடொறு நெஞ்சமேசுகாசுக மெதுவருமது வேயாய்ப், பொருப்புவில்லிதாள் விருப்பமெவ்வினையினைப் புசிக்குஞான்றடைவாயோ, கருப்பையுற்றுதித் தறற்குமிழி யினழிகாயமீதுளபோழ்தே, குருப்பிரான்றிருக் கழற்குமெய் யன்புநீகொள்ளறெள்ளிமையாமே. (கூசு)

ஆமையாருறுப்பைந்தையுமோர் மெயுளடக்கலிற் புலனை ந்துந், தீமைசேர்விடயங்களிற் செலாதமைத்துள்ள மேசிவை பாக, சோமசேகரன்சரணமேசரணெனத்தொழுதுநின் றழு தன்னோ, ஞமநாவினுற் செபித்திலையவத்திலேநாளெலாங்க ழித்தாயே. (கூஎ)

தாயுமாகியென் றந்தையாய்வந்து தாடரு சிவப்பிரகாச ன், றூயபொன்னருள் வேண்டிலையீண்டினின் றுணிவிருந்த னையென்னே, காயமாயமென்றறிந்து மாதர்க டருகலவிவே ண்டினையென்றாற், றீயைநீ மிகநெஞ்சமே யிதற்கியான் செய் வதொன்றறியேனே. (௩அ)

எனைநூல்பல வோதினையோதவற் றிறையருளடையா தார்க், கூனவெம்பவ மொழிப்பதற்குள்ளமே யுபாயம் வே றிலையாறு, லானையீருரிபோர்த்தவென் றம்பிரானருள்விரை ந்தடையாதே, தானிநாண்மினுர்போக நீவியந்தது தப்பலாற் சதுரன்றே. (௩௯)

சதுர்மறைப்பொருளாகிய வொருசிவ சங்கரற்றெழுத ன்பாய், விதிர்விதிர்த்துமெய்பொடித்தில நடித்தில விரைந் துசென்றவனூடும், பொதுவையுற்றில நிற்றில மாதர்பாற் போகுதறவிர்ந்தாவா, வெதுபடக்கடவாய்மடநெஞ்சமே யினி யுடலகன்றாலே. (௪௰)

ஆலநீழலி லன்றொரு நால்வருக் கருநெறியுரைத்தானைக், காலகாலனைச் சிவப்பிரகாசவென்கண்மணிதனையுன்னு, தே லவார்குழலார்மயல்கொண்டு நீயிங்குழலுவதெல்லாஞ், சால வேபிழையாகுநெஞ்சேசொனேன்றவறிலையென்மேலே. (௪௧)

என்னைகண்டு நீமாதரார் வடிவமீதிச்சைவைத்துழல்கின் றாய், பொன்னையுந் துகிலையும் பிரித்திடின்வெறும்புழுமலக் கூடல்லாற், பின்னையுண்டுகொல்கண்டு நீ மயங்குதல்பிராந்தி சங்கரன்பாதந், தன்னைநாடுதி நெஞ்சமே பரசுகோததியுறப் பெறலாமே. (௪௨)

பெறுவதென்னைசொல் சுக்கிலங்கவித்தலாற் பெருந்தவ வலிகுன்று, முறுவதவ்வளவோபினை நீவிரும்புடற்குமானிய

துண்டா, லறிவியாமறியாமைசேர்ய்ந்துடற்றினவதைச் சுக மெனுகின்ருய், செறிதுநெஞ்சமேமமதுசிற்சுக மினிச்சிவனே யாதரிப்பாயே. (சங)

ஆதரித்தனே குளகிருதாதியவடிசிலேக்கூழ்காடி, யேது பெற்றிடினும் புசித்தாற்பசி யேகலுஞ்சமித்தற்ருற், பேதமற் றெலாமலமதாதலுஞ்சரியென்றிடிற்பினெநெஞ்சே, நீ தரித்தி லாதவைவிழைந்துழல்வதென்னிமலனே நினேயாதே. (சச)

நினைப்பினுங்குறிகாட்டிடுங்கோசநா விவற்றுணேரிழை யாரை, யினிப்பைநல்குமுக்கனி முதலியவுண வினையெனினி வைபோலு, முனைப்பல்வாதைசெய் பகைபிறிதிலே யுணர்ந்து ள்ளமேயொழித்தாயேற், பினைப்பராபரன்றிருவடி நீழலியா ம்பெறற்கிடையூறின்றே. (சரு)

இன்று சூழ்தருவனிதையராதிபல்போகமு மித்தேகத், தொன்றுநோயெனிற்ருேடமாய் நீங்கு மாங்குயிர்பெயரினு நீர்றை, நன்றெனுவணிந்துறவினரிறைபெயர் நவிலுவரெனி னெஞ்சே, பொன்றுநாட்டுணையாக நீருதிய போற்றவை போ ற்றேலே. (சசு)

போற்றிநீறணிந்துருத்திர சாதனம் பூண்டிடைந்தெழுத் துள்ளே, சாற்று நீ குருவாதி மூவுருவையுந் தாழ்ந்திறைஞ்சி வைசெய்தான், மாற்றலாம். பிறப்பிறப்பினெநெஞ்சமே மன் றுளாடியதாளுந், தோற்றமுள்ளொளிக்குள் ளொளியாயதைத் தொழுதுவாழ்தலுமாமே. (சஎ)

வாழலா மரன்புகழினமலர் கவிமாலேசெய்தவன்ருளில், வீழுமாறு பொன்னிதழிசேர் தோள்களின் மீதணிந்தினிநெஞ் சே, தாழுவாயரிதேடுபொற்சரணமே சரணமென்றிதுவன்

றிப், பாழிலேகருங்காக்கைபோற் கதறிநாள் பலகழித்தொழியேலே. (சஅ)

ஒழித்திடும் பவப்பகை விரைந்துள்ளமேயோதுமூதுணர்வோர்முற், பழிச்சுபாடலையாற்கவை விடர்க்கிளம்பாவையருரைபோலுங், கழித்திடேலுபசார மென்றிதனை நீ கட்டுரையெனக்கொள்வாய், விழித்துமாரனை யெரித்ததேவருள்பெறும் விருப்பினர்விருப்பீதே. (சகூ)

விருப்பமாயிதுகேட்டி நன்னெஞ்சமே விமலனுக்காளல்லார், பொருப்பைநேர்தனஞ் சொரியினுமவர்களோர் புன்னுனித்துணையன்புந், திருப்பிடேலரன்றொழும்பர்தந்தொழும்பனுய்த்திரிந்தவர்பணிசெய்தீண், டிருப்பையேன் மிகநல்லையிச்சொல்லைநம்பில்லையேற்பொல்லாயே. (ருப)

வைராக்கியசதகத்தின் முதற்பாதியாகிய

சாத்திரமுற்றுப்பெற்றது.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வைராக்கியசதக தோத்திரமூலம்.

பொல்லாதவெனெஞ்சமோரைந்துபுலன்கடம்பா
லல்லாதவைரமாத்திரையுநின்னடிக்கணன்பாய்
நில்லாதிதற்கென்னசெய்கேனிதைநின்றிடென்றே
சொல்லாய்திருத்தில்லையுண்மேவியசோதிநீயே. (௧)

நீயேயருள்செய்யினல்லாதுபொய்நெஞ்சவஞ்சத்
தீயேனுனைவந்தடைதற்கொருசெய்கைகாணேன்
பேயேனுமுனைத்தொடரும்படிபேசுதில்லைத்
தூயோயொருபாயம்விடாதினிச்சூழ்ந்துநின்றே. (௨)

நின்றாய்திருத்தில்லையுளாயென்றனெஞ்சினுள்ளே
யென்றாலுமெனக்கதிதூரமதாயிருந்தா
யொன்றாலுமுனைத்தொடர்கிற்குமுபாயங்காணேன்
மின்றாழ்சடையாய்தமியேற்குவிளங்கிடாயே. (௩)

விளங்கும்மெழிற்பேதையர்காதல்விடாதயானக்
களங்கம்மறுவோர்தொழுநின்கழல்காணுமாறென்
றுளங்கும்மொளித்தூமதிசூடியதோன்றலேயென்
னுளங்கொண்டிடுநீயினிக்கோயிலதாவுவந்தே. (௪)

வந்தித்திடுவார்பவநோய்க்குமருந்தனேயைச்
சந்தித்திடவான்மறித்தான்மனந்தப்பியப்பா
லிந்தப்புவியுங்கடலுங்கடந்தேகுமென்று
லெந்தப்படியுய்வதியான்றில்லையெம்பிரானே. (௫)

பிரானே திருத்தில்லையுளாயன்றிப்பேதையேன்மு
ன்னானேறிவர்ந்தம்பிகையோடெளிதோடிவந்தாய்
வாரானோவினமெம்பிறையென்றுனைநாடிவாடி
யிராநாயடியேற்கெதிர்தோன்றிலையின்றிதென்னே. (௬)

என்னையக்கனேயிமையோர்தொழுமீசனேசெம்
பொன்னார்திருவம்பலத்தாடியபூகநாதா
வுன்னாருளாலினிவீட்டிடையுய்த்தியின்றேற்
பின்னாருயக்கொள்ளவலாரென்பிழைகடர்த்தே. (௭)

தீராதவோரைம்புலச்சேட்டையுந்தீர்ந்துபோய்வெங்
கூடார்மழுவாளிநின்பாதங்குழைந்துபோற்றி
நீராயுருகித்தொழுதுன்னெதிர்நிற்கும்வண்ண
மோர்நாளுளதோதமியேற்குமுரைத்திடாயே. (௮)

உரையேனனிவாய்திறந்துன்புகழ்தன்னைநாளும்
விரையார்மலரிட்டருச்சிக்கவிருப்புமில்லேன்
கரையேனுனநின்னினைந்தெத்திறத்தார்கடப்பேன்
நிரையார்வினையார்பிறவிக்கடற்றில்லையானே. (௯)

ஆனேறிவர்ந்தென்னெதிரேவிரைந்தன்றுவந்தோய்க்
கேனோவெறுப்பிப்பொழுதோர்சற்றிரங்குகில்லாய்
நானோவறிவேனுன்பெருமையைநம்பனேநீ
தானேபொறுத்தாளுகண்டாயென்றவறெலாமே. (௧௦)

எல்லாமறிவோயறிந்தேவகுத்திட்டவாறே
யல்லாற்றமியேனும்புரிவதொன்றில்லையானாற்
பொல்லாமைசெய்வித்தவனீபொறுப்பானுநீகல்
லில்லாயிளைத்தேனைப்பவத்தினிவிட்டிடேலே. (௧௧)

எலக்குழலார நுராகமதென்னுமாயா
சாலக்குணேங்தேற்குன தின்னருடந்துகாப்பாய்
நீலக்களமாலயனோடுமுன்னேடிவாடு
மூலக்கனலேகனலேந்துகைம்முக்கணனே. (கஉ)

கண்ணார் நுதலோய்கடையேனையுமொன்றதாயே
யெண்ணாவருளன்றுசுரந்துளக்கின்றிலாதென்
விண்ணோரிறையோய்க்குமுண்டோசொல்வெறுப்பினோடு
தண்ணார்விருப்புங்கரிப்போர்வையசாற்றிடாயே. (கங)

சாற்றாய்திருத்தில்லையுள்ளாய்சிவசங்கராவெண்
ணீற்றாய்கடையேனுயுமாறென்றனெஞ்சுளஞ்சிப்
போற்றாதிருந்தேன்வருந்தாமலென்புத்திதன்னைத்
தேற்றாயொருநீயினியன்பினைச்செய்யுமாறே. (கச)

மாறாயவோரைந்துபுலன்வலிமாய்த்துநெஞ்சை
நீறார்திருமேனியவுன்கணிறுத்தமாட்டே
னேறாதபவக்கடலேறவுமெண்ணிநைந்தேன்
கூறாயெனதெண்ணமெவ்வண்ணங்கைகூடுமன்றே. (கரு)

அன்றேதமியேற்கெளிமாநுடனாகிநீவந்
துன்றாள்களளித்தனைபெற்றுமொன்றும்பெறாரி
னின்றேனலதைம்புலனென்வசநின்றதில்லை
யின்றோதவற்றைக்கொலுபாயமொன்றீசவெற்கே. (கசு)

எற்கோவுனதன்புமனத்திலையென்றனெஞ்சங்
கற்கேநிகராயதிக்கல்லைநீகல்லைவில்லா
முற்கால்வளைத்தாங்குவளைத்தன்பின்மூழ்குவிப்பாய்
சிற்கோலசிதம்பரநாயகதேவதேவே. (கஎ)

தேவேயுனையன்பினிற்பூசைசெய்தேனுமல்லே
னாவான்மிகப்பாடிநின்றாடிநயக்குகில்லே
னோவாதுழறீமனத்தோடிவணுற்றுளேன்மற்
றாவாவினியென்வருமென்பதறிந்திலேனே. (௧௮)

அறியாமையிற்கீழவர்பல்பிழையாற்றினாலுங்
குறியாதருள்செய்வதுமேலவர்கொள்கையன்றோ
மறியார்கரத்தோய்சிறியேன்வினைமாற்றியாளப்
பொறியேலுனக்கென்முகமன்சொலப்பொய்யனேனே. (௧௯)

பொய்யற்றவர்வந்தடையும்பரிபூரணாவிம்
மெய்யற்றவெற்குநினலானிலைவேறுமுண்டோ
னையற்கிடமேயிடமாவருடாணுவேயென்
மையற்றவிர்ப்பானுன்கடாக்ஷம்வழங்கிடாயே. (௨0)

வழங்கெற்கிவணேதுசெய்தாலெதுவாகுமென்றென்
றெழுங்கற்பனையாவுமிறந்துணர்வேகமேயா
யொழுங்கிற்புலனாதியுபாதியொழித்தொருன்னைச்
செழுங்கைக்கனியொத்துணரும்படித்தில்லையானே. (௨௧)

தில்லைப்பதிமேயசிவப்பிரகாசனேயோ
தொல்லைப்பிறவாநெறிமேவியதோன்றலேயோ
வல்லற்பிறவிக்கிளைத்தேன்றனையஞ்சலென்றோர்
சொல்லைப்பகராய்விடைமீதினங்தோன்றிநின்றே. (௨௨)

தோன்றாத்துணையேபுணையேபவத்தொல்கடற்கென்
போன்றோர்க்குமிரங்குமருட்பெரும்போதமேயிங்
கின்றோர்மனையாதியமோகமெலாம்விடுத்துட்
சான்றாமுனையேவினையேனினிச்சாரவெண்ணே. (௨௩)

சார்ந்தாய்குருவாதியவாய்விடைதன்னில்வந்தாய்
கூர்ந்தாயருளிற்பிறவாநெறிகூட்டுவித்தா
யோர்ந்தேன்குறையின்றெனினுங்குறையுண்டுகண்டாய்
பேர்ந்தோடுமென்னெஞ்சுளுன்னன்புபிறக்குமட்டே. (உச)

பிறவாநெறியாகியதோர்திருப்பேறையாவெம்
முறவேயறவேதவிர்ந்தென்மனமோடிவாடிப்
புறவாதனைபற்றிவளர்ந்திடுபுன்மையாலின்
னிறவேயதனைப்புரிவாலுளந்தெண்ணுவாயே. (உரு)

எண்ணும்வடிவேதினிநீபுனைந்தெய்தினாலுந்
திண்ணம்மெனவாவகலாவசிதம்பரத்தே
நண்ணும்முனதுண்மையைக்காணுயுந்துளேனென்
னுண்ணின்றதைக்காட்டுதற்கீசற்றுன்னுவாயே. (உசு)

உன்னும்முணர்வுக்குணர்வாயெனக்குண்மைதந்தாய்
மன்னுஞ்சுருதிப்பொருளாய்வழிகாட்டிநின்றாய்
பின்னுங்குருவாயடைந்துன்னருள்பேணவைத்தா
யென்னென்றுரைப்பேனின்கருணையிருந்தவாறே. (உஎ)

இருந்தோருமிடத்துணர்வில்லைமாயைக்கிதன்பாற்
பொருந்தாவிடத்தில்லையுயிர்க்கொருபோதமேனுந்
திருந்தாவிவைகொண்டிறையைந்தொழில்செய்தியென்றே
வருந்தாவருண்முன்னிலைதன்னைமதித்தியானே. (உஅ)

மதித்தென்பருவத்தளவிற்குருவாதியாகி
யுதித்துள்ளறிவோங்கும்வகைக்குபாயஞ்செய்தோயை
யெதிர்த்திங்ஙனஞ்சற்குருசற்குருவென்றுணைந்துந்
துதித்துந்திரியாவெனக்கின்னருடந்துதோன்றே. (உகூ)

தோன்றாமன் முனிந்தொருதாய்வயிற்றோன் றுபால
ரீன்றுடனைத்தம்மின்வேறாக்கொடியிகழ்ந்தவாபோற்
பூன்றாவொருநீயருளாற்புனைமேனியெல்லாம்
யான்றான்பலதெய்வமெனக்கொடிகழ்ந்தவாறே. (௩௰)

இகழும்பொருளொன்றிலைமண்முதலெட்டுமெந்தாய்
நிகழுன்வடிவேயெனத்தேர்ந்துளநெக்குநின்றாள்
புகழும்படியேயினியீசவென்புத்திதன்னைத்
திகழும்படிசெய்திதிரோபவஞ்செய்திடேலே. (௩௧)

செய்யாய்கரியான்றொழும்வெள்ளிளஞ்சேவையூர்வோய்
வையார்மழுவோய்திருவுள்ளமிவ்வஞ்சனேனு
மையாவிழிபெய்வுறநீர்பெரிதன்பினோடு
கையாற்றொழுதேத்திநின்கூத்தினைக்காணுமாறே. (௩௨)

காணாதபவக்கடலின்கரைகாணவெற்குக்
கோணாகணிமார்பமெய்யன்புகொடுத்தியென்றே.
நாணாதிசைத்தேன்றிருக்காளத்திநாதவுன்றாள்
பேணாதவல்க்கடன்மூழ்கியபேதையேனே. (௩௩)

பேதைக்கொருபாகமளித்திடுபேரையாவெங்
கோதைக்குநின்றோளுறுகோதைகொடென்றுநின்பா
லோதற்கெனுளத்தைவிடுத்தனனோடிமாதர்
காதற்களையுண்டமையாலுனைக்கண்டதின்றே. (௩௪)

கண்டேன்களிகூர்ந்துசிவப்பிரகாசநாமங்
கொண்டோங்குருவோடிவனுற்றெனையாண்டகோவே
பண்டேயொருநீவகுத்திட்டபடிக்கியானுன்
றொண்டாகிவந்தின்றுனைப்பாடத்தொடங்கினேனே. (௩௫)

தொடக்காவினைச்சூழ்ந்துள்ளைம்புலத்தோற்றமெல்லாங்
கெடக்கூறு திநீயொருசூட்சிகிளக்கிலாயே
யிடக்காவவையென்றனகத்துளடங்குகாறுங்
கடக்கேன்பவவேலையெவ்வண்ணமுக்கண்ணினனே. (நசு)

கண்ணான்மதனைப்பொடியாம்வகைகண்டவெண்டோ
ளண்ணாவுயிர்யாவுமளித்திடுமெப்பனேயோ
தண்ணார்பொழிற்றில்லையுளாயெனக்கீதுதாராய்
மண்ணாதியவாசைகளற்றனைவாழ்த்துமாறே. (நஎ)

வாழ்த்தேனுனைநாடொறும்வாழ்த்தவல்லோர்கடாளிற்
றாழ்த்தேன்றலையாங்கவரேவறலைக்கொள்கில்லேன்
வீழ்த்தேநெடுங்காலமவத்திலொண்மேருவில்லோய்
பாழ்த்தேன்கிளிபோற்பலநூல்கள்படித்துமியானே. (நஅ)

யானொருடற்கின்பதுன்பங்களையெண்ணவெண்ணித்
தானேசிறுபாலரினென்மனஞ்சஞ்சலிக்கு
மீனாயினன்பாலலதென்கண்விடுத்திகொல்லோ
வானேறுடையாய்திதியாமதிகாரநீயே. (நகூ)

காரார்மிடற்றாயளிசூழ்தருபொற்கடுக்கைத்
தாரார்புயனேசிவகாமசவுந்தரிக்கோர்
சீரார்மணவாளவென்றன்குலதெய்வமேநீ
பாராய்கடைக்கண்ணெனதெண்ணம்பலிக்கவின்றே. (சo)

இன்றென்னைசெய்கேனெனநாடியிருந்தநீயேற்
கொன்றெய்திடினெவ்வண்ணமறும்மதையோதுவேனோ
வன்றன்னமுமேனமுமோர்வருமையனின்று
ளொன்றன்பர்குழாத்துறவீதருளாயுவந்தே. (சக)

உவந்தாயெனதைம்புலனும்மிரிந்தோடவோர்நாட்
டவந்தான்சிறிதும்மிலிபால்விடைதன்னின்மின்னோ
டிவர்ந்தேவராநாளும்விளங்கிலையென்னைகொல்லோ
வவந்தான்மிகுபாவியுன்லீலையறிந்திலேனே. (௬௨)

அறியாமையிற்கட்டுணலுற்றதென்னுண்மையத்தைப்
பிறியாதுவிடேனெனலெந்தைபிரானுனுண்மை
குறியிருவர்க்குமென்றாலெனைக்கோபியேலே
செறிவாய்மலமேயிறையோடிகல்செய்ததன்றே. (௬௩.)

செய்விப்பன்வினைத்தொகைவெம்பவஞ்சேர்ப்பனுன்னை
யுய்விப்பனேலச்சிவனுண்மையுமோர்வனென்றே
னைவர்க்கெதிரேயெனைநோக்கியறைந்ததையா
மைவெற்பனவாணவரீயதைமாற்றிடாயே. (௬௪)

மாற்றாயெனக்காணவமாயையில்வந்துவந்தே
தோற்றாவுளகேவலமாதியசுத்தமொன்றா
டேற்றாயவனேற்றியிரண்டறுத்தெங்குமாகிக்
கூற்றாவிகொன்பதத்தென்னாவியுங்கொள்ளுவாயே. (௬௫)

கொள்ளேனெனினுமெழுத்தைந்துமுட்கோதியாதுந்
தள்ளேனெனினுமுனைச்சார்தவஞ்சார்ந்திலாரை
விள்ளேனெனினுமெனைநீகைவிடேல்விடேல்கா
ணள்ளாறுடையாயவிநாசியமர்ந்துளானே. (௬௬)

நயவாதுதில்லாபுரியோயுனைநாடிநாளும்
வியவாதுடலோடுறவென்றும்விடாதென்னுள்ளங்
கயவாதருபோகமெலாமிவைகண்டுவீடும்
பயவாதிதென்றேபயந்தேன்மிகப்பாவியேனே. (௬௭)

பாவாற்பெரியோர்புகழ்சிற்றம்பலத்துளோயை
நாவாற்சிறியேன்றுதிசெய்யுமிந்நன்கில்சொல்லு
மோவாதிரையோருழைதாவியவுன்செவிக்கே
மேவாதலவென்றுதுணிந்துவிளம்பினேனே. (௯அ)

விளம்பற்கருஞ்சோதியென்கோவிடையோனென்கோவென்
னுளம்புக்கசிவப்பிரகாசனென்கோவென்னங்கைத்
தளம்பற்றியசாந்தனென்கோநின்றனதுநாமம்
வளம்பெற்றதிருக்கயிலாயசொல்வாயெனக்கே. (௯௯)

எனக்கீங்கினியாண்டிடல்வேண்டுமெம்மீசனேமற்
றுனக்கேசரணஞ்சரணம்புலனேடுமென்றன்
மனக்கோதனைத்துமிறங்தோங்கறிவாகியாங்கே
யினைக்காண்பவன்காட்சியுமற்றவபேதவாழ்வே. (௱)

சாத்திரம்-௫௦, தோத்திரம்-௫௦, ஆ பாடல் ௧௦௦.

வைராக்கியசதக முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வைராக்கியதீபமூலம்.

---:o:---

காப்பு.

ஆரணமுகம்புகழ் வாரணந்துதிசெயக்
காரணசுகபரி பூரணம்வருமே.

போரூரிறைவன் சீரூர்தாளை
யேரூர்தரநினை நேரூர்நெஞ்சே.

ஆய்ந்தவின்பம வாய்ந்துளநிறையச்
சாந்தையன்பதம் யாந்தொழுவோமே.

வேறு.

தாயினுமிரங்கியென் றனைவந்தாண்டரு
ளுயவன்சரணமே சுமக்கவென்றலை
வாய்துதிசெயக்கர மலர்கடுய்த்தொழ
நேயமோடதுதின நினைகநெஞ்சமே.

பாயிரம்.

திருவளர்கமலத்தயன்செயிப்புவிமுன்றிகழ்தருமுலகெலா ந்தன்பான், மருவுசிற்சத்தியெனுங்கிரணத்தால்வந்தெழுகான னீராக, விருமையாமதிமாய்த்தறிஞராங்காந்தத்திடையருட் சுடருமிழ்ந்திலங்கு, மொருசிவாதித்தன்றனை நமதிருள்போ யொழியநாடொறுமிறைஞ்சிடுவோம், (௧)

துன்னியாணவப்பாம்பெமதறிவெனுமோர் சுடர்கெழு பூரணமதியை, முன்னமேதீண்டிற் றெருளிவெளிப்படலான் மோசனகாலமெய்தியதாற், றன்னிடத்தீசன்முதற்புவிமுடி வெண் டருநுரையாதிவந்தொடங்கப், பின்னையபின்னையாந் திரைகள்வீசிடுமோர் பிரமவேலையிலினிப்படிவாம். (உ)

எப்பொருள்களுமாயொப்புயர்வின்றி யிருந்ததன்னுரு விறைகுறையா, தப்படியிருக்கவாலியாரீரி னருளிறையாயெ மக்கேம, வைப்பெனவன்னையெனப்பிதாவெனக்கண் மணி யெனத்தவப்பயனெனவுட், செப்புயிரெனவந்தாண்டகாளத் திதேசிகன்றிருவடிபணிவாம். (ந)

அருந்தியகாலத்தற்பமாப்பிற்பே ரௌடதமுடலினின் றுடலை, வருந்தல்செய்பிணியெல்லாமகற்றுதலின்வஞ்சனே னெஞ்சின்மாற்றரிதா, யிருந்தவெப்பற்றும்பிற்றைநாள்களி ன்விட்டேகவன்றேகடைக்கணித்தல், புரிந்தசங்கரவனருளி ருந்தமையெப்பொழுதுமுண்ணினைந்துவாழ்த்திடுவாம். (௪)

அரையன்வாயுரைகள்வரைதருமுடங்க லதுவரக்காணி ன்மற்றவனு, டரையின்வாழ்பவருண்ணடுங்கியோர்ந்ததன் வாய்ச் சாற்றியமுறைசெய்வாரென்றூற், கரையில்பேரின் பந்தரவெமக்கிறைசொல் கட்டுரையென்னின்வேறென்னை, யுரையுளவேதாகமமவனெனக்கண் டுரைத்தவாபுரிகுவதல் லால். (ரு)

கற்பழமாகப்புரிதலிற்பெரிதென் கருத்தினைத்திருத்திவு ந்தாண்ட, சிற்பரனருளாற்சொற்பொருளறியா தேனும்வே தாகமவழியீண், டெற்பவமாதித்துயரைமுற்றவத்தா னுணர் ந்தவர்துறவெனும்வாளா, லிற்பொருந்துதலைமுதலவாவறுத் தோரின்பவீ டெல்சொல்ற்கியைந்தேன். (சு)

துணையிலாப்போராசைக்கடலுளோர்கரையாந் துறவுவந் துறவுந்தற்கோர், புணையெனப்பெரியோர்வகுத்தநூல்களி ன்முற் போதமிலேனுமீதுரைத்த, லுணையமெய்வருந்தவய னெடுமாலன் றுயர்ந்துதாழ்ந்தோடியுங்காணு, விணையிலிந டித்தல்செயமருங்கலகை யினமசைந்திடுதலினன்றே. (எ)

கயல்விழிமனைவியனைமுதலியவாங் கட்டதுதனை யென னெவு, மியல்பசாமசுத்தமாதியாருடற்கட்டிதனை யானெ னவும்வைத்தெனுமோர், மயலதாமிருளைத் துறவெனுமொ ளியான் மாற்றிநெஞ்சகத்தினைவிளக்குஞ், செயலினிந்நூற்கு ப்பெயர்வயிராக தீபமென் றுரைத்திடப்படுமால். (அ)

உருட்கறங்கூசன்மனமொடுங்கிடவென் னுணர்வுநேத் திரக்கியானெனதா, மிருட்கெடுத்தெலாமாம்பொருட்டிகழ் த்திடுமோ ரெழில்வயிராகதீபத்தை, மருட்கொடும்பாசக்கு ழுக்கண்யாம்விழா வகையருளினன்மறைமுடிவின், றெருட் கமைவீரசைவனெஞ்சாந்தலிங்கதேசிகன்றெருட்சுடரே. (கூ)

பாயிரமுற்றிற்று.

---

## நூல்.

தோன்றிநின்றழியப் படுங்கொடும்பிறப்பிற்றுன்பமேயன் றியெட்டுணையு, மூன்றிநெஞ்சகத்தோர்ந் திடிற்பிறிதிலையா லுண்டுபோற் றிரித்துயிர்க் கெல்லாந், தான்றிகழ்த்திடுமோர் வகத்திருளிருளுந்தவிர்ந்துமற்றதுமுளபடியே, யான்றவீடுறை முற்பவந்தவம்புரிந்தோரகத்தினுட்டெரிதருமன்றே. (க0)

உடலிதுற்பவத் தோரைம்பெருந்துயர்மாய்ந்துறுகணத் துயரினெண்மடங்கா, விடையுளதிதிக்கட்டயரமூப்பறிவோ ங்கிளமையிற்பிணியுறுவிடத்தும், விடலரும்புசிநோய் காம

நோய்தணிப்பான்மிகுபொருடேடுதறுயரீண், டடையினுமத
னைக்காக்குதறுயர்வேந்தாயினுமிகுநாற்றுயரே. (கக)

இளமையிற்பிணியற்றெருகுடைநிழற்கீ ழிருநிலமுழுவ
தும்புரக்கும், வளமைபெற்றுடையமகற்குமெப்பொழுது வ
ருங்கொல்கூற்றெறனும்பயத்தானு, முளமிகப்பறைநின்றறை
யுமேற்புவிமீதுடையரோமற்றையரின்பங், களிமிகுத்திருப்
பர்தெளிவிலாமையின் மேற்காரியங்கருதுருநரே. (கஉ)

பிறப்பிறப்புடையராயிடையினும்பல்பிணிபயந் தணிவில்
காமாதி, யுறப்படுதலின்வானவர்க்கு மற்றென்னை யுளசுகந்
தேவின்மாறுடத்திற், சிறப்பிவையென்ருற்குறுக்கியோனிக
ளின் றீமையுங்கொடியர்வீழ்நிரயத், தறப்பெருந்துயரு மு
ரைப்பதென்பிறப்பூடாதலாற்றீதலாதிலேயே. (கங)

அரிதுபெற்றிடினும் பெற்றதின்விருப்ப மறப்பெருதன
விரும்புயிர்க, டெரியகிற்கிலமீதெனைமுனமடையாச் செல்வ
மாய்ச்சொல்பவித்திரமா, யுரியசிற்சுகமாய் நித்தமாயொரு
வீடுளதெனக்கேட்டுமற்றதனிற், பிரியமற்றினமுமுனமுறும்
பொல்லாப் பிறவியேபெறவிரும்புதலே. (கச)

துன்பவெம்பிறப்பி னிழிவையுமழியாச் சுகபரவீட்டுயர்
வினையும், பின்பவைதொலேத்தெய்தருங்கருவியதாப் பெற்ற
விப்பிறப்பையுமிதனின், மின்புரைநிலேயாமையையு மோர்ந்
தன்ஞேர்விவேகியுமெனிற்பினும்விடயத், தன்புருவீடு புகமி
கவிரையாதரைக்கணந்தரைக்கணுற்றிடுமே. (கரு)

வினைப்பிறப்பொருவன்றுயரமென்றுணரின் விடயபோ
கங்கணச்சுதலுந், தனக்குடலனியமுணர்தரின்மரணஞ் சார்
குறிக்குளங்கெங்குதலு, நினைத்திடினிதன்பேற்றருமைமாதவ

ங்கணீங்கி நாள்கழித்தலுந் துணிவி, லசித்தமோர்ந்திடினோர் கணமெதிர்காலத்தவதிகூறிடுதலுமிலையே. (கசு)

கருமமொன்றியற்றப்பிறர்கையிற்கருவி கவர்ந்துளோ ன்பினுமவர்கொளுமுன், விரைவினெண்ணியசெய்யாதுமற் றதையேமிகச்சிறப்பித்துநோக்குதல்போற், புரையில்வீட்டி ன்பமடைகுவானதற்குப்பொருந்தியவருந்தவம்புரியா, தொ ருகணமேனுநிலையிலிவ்வுடல்வைத்தொப்பனைசெய்து நோக் குதலே. (கஎ)

பவத்தனிப்பரவைக் குரவையைத்தானப் படவையைக் கொடுகெடப்பரிதா, லுவப்பொடுதவப்பாதையி னிவர்ந்தன்றி யுண்மையிற்றகவிகந்திலகோ, ரவப்பொழுதகல விருப்பதெ ன்விருப்போவகன்றவர்க்கருத்தலாதிகளாற், றவத்தினைமற ந்தார்கொல்லெனுஞ்சொல்லைத் தமதுளத்துணர்கலார்போ லும். (கஅ)

ஈதலேயறமுமகித்தமாமனைத்து மிகழ்ந்துகைவிடுதலே வீடு, மாதலாற்றனக் குறியவில்வாழ்க்கை யதனையேயறமெ னக்கூறிக், கோதிலாவீட்டினிலக்கணமிருத்தல் குறித்துமெ ய்யுணர்வையுந்துறவு, டோதினார்வேதந் தனைத்தமிழுருவத் தொளித்தெமக்களித்தவள்ளுவரே. (கசு)

திறந்தருந்தெய்வப் புலமைவள்ளுவனார் நீத்தவர்பெரு மைநூன்முகப்பாற், சிறந்திடவமைத்தாங் கதுகொடில்வா ழ்க்கைச்சிறுமைதூற்றினரது தெரியார்க், கறந்தவாதியற்றி னவனினுங்கோடியதிகமாமெனமனமருது, துறந்துளோனை யும்பட்டணத்தெமதடிக டொகுத்தகட்டுரைதிகழ்த்திடுமே. ()

பிறப்பெனுநரவரிச் சுழியதாமெழிலார் பெண்டிராதிப வுயிர்ச்சார்வுஞ், சிறப்புறுபுவியாதிபொருட்சார்வுந் தீரக்

குதறுறவவற்றா, றெப்படுமெவைகீப்பினு மறிவுடையோ ரொருதமதனைபிதாவினையுந், துறப்பரேற்றுரப்போர்க் கரு நரகெனநீ சொற்றசொற்சத்தியமாமால். (உக)

விடையதூரிறையேதாதைமற்றவன்பான் மின்னெமத ன்னையன்னவரைக், கடையரேமறந்துதுறந்துதானன்றே கடு ம்பவவிடும்பையுற்றனமிவ், வடைவுணர்ந்திலேபோன் றுட லிதற்கேதுவாய்வரத்தாய்பிதாவெனநெஞ், சுடைவுறு நின் றுய்பவந்தொறிவ்வணமுற்றுளவுயிர்க்களவியாதுரையே.(உஉ)

தனதகத்தகலாதிருந்துபேரின்பந் தருதலான்மனைவியு ந்தன்பா, லினிதுதித்தொருதன்வினையொழித்தசையாதிருத் திவீட்டமுதருத்துதலா, லுனலருஞ்சுதனு மொருவனுக்கவ னூடுதயமாயெழுந்தமெய்யுணர்வே, பினையிஃதன்றி மனைசுத ரெனயாம்பேணிநாட்கழிப்பதும்பிழையே. (உ௩)

வேண்டினுண்டாகத் துறக்கவென்றமையால் விருத்த னுய்க்கருத்தழிந்துருவங், காண்டல்செய்விழிபஞ் சடைந்து டனடுக்குங் காலம்வந்தடைவதன் முன்னர், மாண்டகற்பத னுற்சாலியைப்போலுமனைவியாதியசமாதியினுற், றீண்டுமான ந்தம்பலவடைந்திடுதற்கெண்ணிநீத்திடுவர்புண்ணியரே. (உ௪)

இளமையின்மனையைத்துறத்தறீதெனிற்று னிறத்தலிற் றுறத்தலீடலவா, லளவிறீதஃதாங் குயிர்ச்செயலன்றே லாப ற்சந்நியாசந்தீததுமெய், விளிதலாற்பழுதின்றேற்பினுமிருப் பார்விடுதறீதடுபிணிகுறித்தே, லுளையுநோயிலரு மிறப்படுதெ ன்பிறப்போர்ந் தொழித்திடிற்பழித்திடாதுலகே. (உ௫)

இக்கணத்திருந்தினிவருங்கணத்து டிருக்குமோமரிக் குமோவுடலென், றக்கணமனையாதிகட்கரன்றுணையா மன்

றெனவெணித்துறவறஞ்சார், மிக்கவனுபற்சந்நியாசியுஞ்சார் வினாக்குரஞ்சேர்த்திவிட்டவனுந், துக்கமேவலிற்பின்பவரிவ ன்போலுந் துறவரன்றென்பதுந்துணிவே. (௨௬)

பிறந்தவப்போழுதேயினியொருதலையாப் பிறப்பறுத்திடுவமென்றெணியே, யுறைந்தனை வயிற்றிற்பினையதுற்பவத் தூயுறுபெருந்துயரினாலுயிர்கண், மறந்துறுமுறையுஞ்சுகரக ன்றமையு மதித்துநெஞ்சழிவினம்போல்வார்க், கறைந்திடுமெ லதுபிறப்புணர்ந்தகல்வார்க்கவதியுமறையுமோமறையே. (௨௭)

கருப்பமாருயிரத்துயர்பெயர்த்திடுதல் காரண பூரண ஞானம், விருப்பமாயடையக்கடவமென்றிருக்கும் வியாசர் சேயடைந்ததுமதுவே, திருப்பியீண்டதனைத்துறவின்மீதேற் றிச் செப்பலென்னெனிற்றுறவினைவிட், டிருப்பதோர்ஞான மெவன்கொனீத்தவரென்றிசைப்பதென் பெயர்மெய்ஞ்ஞானி கட்கே. (௨௮)

ஞானியஞ்ஞானங் கெடுத்தலாற்றுறவோ னெனப்படு நவிற்றினஞ்ஞானந், தானுடலினைநானெனுமகவிருளென்றனை யஃதெமக்குமொத்ததுவா, னூனமின்மறைதேர்ந் தொரு சிவநானென் றுளத்துணிச்சயித்தவக்கணமே, யானெனறவி ர்ந்தவ்விருளுமாய்ந்திடுமென் றிசைத்தனையிதுபழுதன்றே. ()

திரிவிதவுலகத்தரிதொருஞானிதேர்விடத் தென்றுபோ ரொன்றை, யுரைசெயிற்பிரமவித்தையொத்தரிதோவென்று மிவ்வுலகுரைப்பதனா, லரிசொல்கீதையிலும் பிரமசாதகரினா ர்க்குளவருத்தமென்பதனாற், பெரியதோர்வருத்தமெனம றைதுணிந்தப் பிரமநானெனவிருத்தலினே. (௩௦)

வருத்தமொன்றின்றிச் சாரலாம்பிரமமென்றயன்வகுத்த கீதையினா, லுறைத்ததெத்தினுக்காயெனிற்பரஞான முணர்

பவர்க்குன்றுதலுரைத்த, னிரைத்திடுதொழில்களொன்றும்
வேண்டாது நீத்துவாளாவிருத்தலின், லருத்தமற்றதனுக்
கோர்ந்துநூறெளித லாகநீதுணிந்தனைபோலும். (௩௧)

சிறியவர்பணர்சோ றுண்டுதேக்கிடல்போற் றேர்ந்துநூ
றெளிந்தமாத்திரத்தி, னறிதரிற்சிவமும்விடயமாமெனநீத்த
கத்திருளறுதுவைத்தந்தோ, வுறுமகப்பிரமமெனவுரைத்தி
றுயாந் துறைதலோஞானமஞ்ஞானம், தறவினையுறுதுமா
யுபேவாயாற் சுடவெனினிருடிமிந்திடுமே. (௩௨)

ஞானியேயெவரும்வணங்குதற்குரியோ னவிலுமாசௌ
சரில்பெரியோன், பானிலத்தவன்றனுடல்விடிற்குகைப்பால்
வைக்கவென்மறைப்படிபுரித, றனும்வேதாந்தப்பொருடுணி
ந்திடினுஞ் சாற்றினில்வாழுமந்தணர்க்கின், றனதாற்றுறவு
பெற்றநற்றவரே யமலவீடடையுஞானிகளே. (௩௩)

தேர்ந்திடினபரம்பரமெனவிரண்டாய்த் திகழ்தருஞா
னமாங்கவற்றா, டோர்ந்திடுமறையாதியகலையபர முயிர்பர
னொடுவிரவயிக்கம், கூர்ந்துணருணர்வேபரமதைத்தெளியக்
கூறன்மாத்திரங்கலைஞானஞ், சார்ந்துணர்வரிதப்பரனையோ
ர்ந்தன்றிச் சாற்றினவ்வயிக்கமாந்தலமே. (௩௪)

அடுத்தவிச்சீவன்றன்மையோர்ந்தன்றி யறிவொனுப்ப
ரனையஞ்ஞானங், கெடுத்தலாற்சீவன்றனையுமோர்ந்தொரு
வர் கிட்டொணுநனவினிற்சுழுத்தி, யுடைத்துமற்றெவனுக்
வனவஞ்ஞானமுடைக்குமட்காரணவாதனைக, டைத்திடின
பாவமெனப்படுநனவிற் சுழுத்தியுமெளிவந்துதோன்றும். (௩௫)

யோகசாதனையால் வாதனைகரணக் கொழியுமவ்வியோ கமுமிருமைத், தாகுமேகிரியையைஞானமென்பேதத் தாதனுதி யதொழில்யோக, மேகமாம்பொருடோர்ந்ததுவிதுவெனுஞ் சுட்டிறத்தன்மற்றையதிருவகைக்கும், போகவேண்டிடுமை ம்புலன்களுமிறந்தப்புலனவாவொழித்தலாற்போமே. (௩௬)

ஐம்புலனடல்வேண் டும்விடல்வேண்டு மொருங்குவே ண்டியவனைத்தையுமென், றும்பரும்பரவுமொருதமிழ்வேத முறைத்தலானேரிருவகையா, னம்புறச்சார்பைவெறுத்தவா வறுத்தைம் புலனொழித்தொழுங்கினுடருமச், செம்பொருள் காண்பதறிவறியாமை சிதைத்தல்வீடெனத்திகழ்தருமால். ()

அரம்பையுள்ளுறுதண்டெடுத்தலினொருவனநுபவமாஞ் சிவமுணர்த, னிரம்புமெய்யுணர்வத்தண்டின்மீதொன்றி நி ன்றநாடனைத்து நீக்குதல்போல், விரும்பிருவகைப்பற்றையுந் துறந்திருளைவீட்டல்வீடிவற்றையேயன்றி, வரும்பரவுரனும் வீடும்வேறறியேம். வார்த்தைமாத்திரத்தியாம்பெறவே. (௩அ)

இருவகைச்சார்பாமொருபுறப்பற்று மிடையதாங்கடை யுடற்பற்றும், விரிகாரணங்களாகுமுட்பற்று மெனத்திரிவிதம் விளங்கிடுமித், திரிவிதத்தினையுங்காத்திரங்கரணஞ் சேர்த்தி யொன்றாக்கொடுட்பற்றும், வருபுறப்பற்றுமெனவிரண்டா க மதிப்பரவ்வணந்துறவையுமே. (௩௯)

இருவகைப்பற்றிலொருவனேஞானி யெனப்படிற்புறப் பற்றதேனு, மொருவுதலிலருமெவணமப்பெயருக் குரியர் வேறொன்றுமில்கொடியுர், தருமிலைமலர்காயெனினகப்பற்றி றவர்புறப்பற்றையுந்தணவார், மருவினுமஃதோரொருவர்வேர ன்றிர் மலர்க்கொடிவாடுமிருவகையே. (௪0

வேரறக்கொடிவாடுதலினுட்பற்றை விடுக்கின்மற்றைய பற்றுநேரே, சோருதலியல்பாமதனையேமுன்னர்த்தொலைக்க வேண்டுவதெனிற்கடுமுட், சாருமோர்கொடியின் கிளையினைத் தையுமுன் றறித்தொழித் தலதனிடையா, ரோர்தனிவேர் கொள்ளரிதரிதகப்பற்றொழித்தலும்புறப்பற்றதுறவே. (௪௧).

முள்ளில்சில்கொடிவேர் கொளலின்முற்சனகன் முதலவோரொருவர்மற்றொருதம், முள்ளமாசணுகா வியல்பினனக ப்பற்றொழிப்பினு முனமெனையுறழுங், கள்ளநெஞ்சினர்பற் பலரும்வீடடையுங் கதியதன்மையிற்றுறவளந்த, தெள்ளியோர்புறப்பற்றொழித்தலேமுதற்கட் செப்பினரெவர்க்குமொப்புறவே. (௪௨)

விடத்தகுமகப்பற் றினைமுனம்புறப்பற் றொழிப்பதெற் றினுக்கெனவிளம்பல், படிற்றொழுக்கினர்சம் மதமும்வானவரும் பயிலில்வாழ்க்கையும்விடுக்குதலென், றெடுத்துமைங் கறிவாசாரயோதியசொற் கிழுக்குமாகுதலின்மாசியல்பாத், துடைத்தசிந்தையர்க்கு நிந்தையிலொழுக்காச் சொல்வர்முன் புறல்புறத்துறவே. (௪௩)

ஒன்றியபாச விருடுரந்திடுதற் குபாயமைம்புலனெடுக்கிடுத, லொன்றலதிலையென்றதுசெய்வோனவைவேண் டனைத்துமுன்விடாதுவைத்துறுத, லென்றுமெவ்விடத்து மெனை முதலுயிர்களெவற்றையுங் கொலைசெயேன்வெருட்டே, னென்றுசொல்விரதி யோருவனுடொறுங்கை யிலடயினேர்படைகொளுமியல்பே. (௪௪)

சாதகதசைக்கண்விடயமேதடையாஞ் சாத்தியமானபின் புசித்தற், காதல்வைத்திடினப்பிரமவானந்தத் ததிகமோவிட

யவானந்தம், கோநில்வீட்டின்பம்பெறுகலாவிடினுங்கூடுதற் கெனிற்கரிபிழைக்கிற், றீநிலோர்சிங்க மதனையேயன்றித்தே யமோதேதைரயுன்றினவே. (சரு)

படையெடுத்தமர்க்கட்சாருமோர்வீரன் பகைஞரைச்சயங் கொளாவிடினும், விடையெனப்பொருதாங் கிறத்தலேயன்றி வெங்கிடவுன்னிடானதுபோற், கடையெனவிடய மிகழ்ந்து பேரின்பங் கருநினேன்பெறுகலாவிடினு, மிடையறாதனை நாடுவதலான் மறந்துமெண்ணுமோ மண்ணின்வாழ்க்கை யையே. (சசு)

இந்திரசாலத் தொருநகர்காண்போ ரெனத்தனுமுதற் பிரபஞ்ச, நந்தினுங்கெடினும் பூரியாவாடாநன்மனச்சனகனுதி யரு, மந்திரிமுதலோர் மீதுபூபாரம் வைத்தொரேகாந்தத் துள்வதியாத், தந்தொழிலொருக்கிச் சமாதியுற்றன்றோ தவிர் ந்தனர்காரணவாதனையே. (சஎ)

சொற்றிடின் மயக்கமற்றுநித்துளவச் சுகருமொண்டா ரதயைத்துறவா, வுற்றிருஞ்சமாதியுற்றகப்பற்று மொருவி வீடடைந்தனர்சனகர், முற்றவமுனிவர் நால்வருமொருநான் முகப்பிதாவிடத்தவன்வளத்தோர், பற்றுமற்றகப்பற்றையுமு யர்சமாதி பணியொழித்தெணியவீடடைந்தார். (சஅ)

தத்துவமுணரவேண்டினேன்மனமுற் சகலமும்விடுத் துமெய்ஞ்ஞான, முத்திரைநிகழச்சமாதியுற்றல்லான் முடியு மோவெனவுமைமுதலா, வைத்ததற்குழாத்தை யொருவிநீள் கல்லான் மரத்தினிழலிற் சமாதியையுற், றத்தனேயுணர்த்தி ஞனனிற்பினும்வே றறைதனம்மிகுமடனன்றே. (சகூ)

எடுத்துளகுடும்பச் சுமையொடுண்டொருவ னெங்ஙன ஞானவாசானே, யடுத்தவனேவ ரெடுத்தருள்சுரக்கு மளவு

நின்றுளமகிழ்ந்தன்னோன், கொடுத்தநாள்வாங்கிக் கொளும் பரமார்த்தங் கூடினுங்காலமாதிகளாற், றடுத்துரை தொழிலை விடுத்தலாற்சமாதி சார்ந்தஃதுணரவும்படுமே. (௫0)

தனித்திருந்தொருதம்மனத்தையும் பொறிவாய்த் தடுத்தகப்படுத்திஃதெத்தை, நினைத்தெழாநின்ற தென்றுநோக்குநரே நீக்குவர் வாக்கொடுதொழிலைப், பினைத்தடையாம் போக்குவரில்வாழ்க்கையையும் பேச்சொடாறும்பழகுநர், தனைத்திலொன்றேனும் விடார்பிறர்காண்ப தன்மையானகப்பற்றேவிடுப்பார். (௫௧)

தந்தைதாய்முதலாம்பந்தநீங்கிலர்க டாமுயுசெறியதின் றெனுஞ்சம், பந்தனுருரையும்வேண்டியசெய்தப்படாதுசுற்றமும்விடாவிடினெ, னெந்தைவாக்கரையருளையுமாதியவாக்கியம்பிரமாணமாமெனக்கொள், புந்தியார்புறப்பற்றறவகப் பற்றைப் போக்கவாய்ப் போக்குதலிலரே. (௫௨)

விடுக்குநர்புறப்பற்றதினுயிர்ச்சார்பை விடுத்து மற்றைய பொருட்சார்பைப், பிடிக்குதலொழுங்கன் றெனினுரையிடமும்பெறுமுதொழித்தநீதெனவே, படிக்கணியுரைக்கக்கேட்டன முனைப்போற் பற்றிநோக்காமையி னன்றே, விடுக்கவென்றனைத்தும் விடுத்தனருலக மேத்துபத்திரகிரி முதலோர். (௫௩)

துறந்தவன்பொருட்சார்புரவறிவிலர்க்குத் தூயஞானதிசாத்திரங்க, ளறைந்திதம்பேசிப்பொருள்கவர்ந்தசனு னச்சமுமிச்சையாதிகளுஞ், செறிந்துறவகத்துண் டினியவூணிருக்குஞ் செய்தியானெய்சொரிதழல்போ, லிறந்திடாமனவாதனை பினைத் தனதோ ரணத்தையெவ் வணத்தினுன் முடிப்பான். (௫௪)

பொருளறத்துறந்து பலிக்கமேற்றருந்திப் பொருந்திஞு மோரிடம் பிடித்துள், வெருளறப்பனியாதியினுடற்பழக வே ண்டுமின்றுருதருஞு, மிருளறத்தீபமேற்றன்முன் றொழில்க ளொன்றும் வேண்டிடுதலானிடரு, மருளறச்சிதலே முதலுயிர் க்குறுக ளுற்றலுமதன்பொருட் டாமால். (௫௫)

பிரிதுநோய்தன்ஞேய்போன்றுபோற்றுனேற் பெரிது நாலறிநிஞேர்ந்துணர்ந்த, வறிவிஞனுண்டோவாவதென்ற மையா னறைதருசராசரமெவைக்குஞ், சிறிதுமோர்துயரமற வியுற்றேறுஞ் செய்யுமேமெய்யுணர் வடைவான், மறுவறுதுற வைப்பொன்செய்வாணிகர்போல் வருந்திகாடொறும் வளர்ப் பவனே. (௫௬)

தனக்கினியவனும்வகைசராசரங்க ணினைகவென்றுமை க்குரைத்ததுவும், வினைக்கடல்கடந்தபரதர்முற்சிவிகை சுமந் துசென்றதுவுமோர்மேலோர், பினைக்கொல்பாம்பாதியுறுத லஞ்செலுங்காற் பேணவிற்றமைநடந்திடும்போ, தினக்கறை யாஞுதியமரியாதங் குரமுரியாதியங்கிடுவார். (௫௭)

தம்மிடத்தேனுந்தமக்கினியவர்பா லேனுமோரிடர்வந் துசாரி, னம்மவூழ்முறையென்றறிந்துமேழ்கடலோ ரனுவெ னவுருகுமென்போல்வா, ரிம்முறைதுயர்வேறுயிருறினிரக்க மின்றியதன்றியுந்தம்மால், வெம்மையகொலையொன்றடை யினுமதனு ழென்பதென்மிகமுகமலர்ந்தே. (௫௮)

இம்மையினிகழ்ச்சிமறுமையிற்சிறுமை யெய்துமென்று யிர்க்கொலைபுரியாச், செம்மைபைங்கனகமாதிகைப்பற்றுத் துறவினைச்சிலரடைந்திடினுந், தம்மையொத்துயிர்களனைத் தையுங்காணுந்தயவுயர்தபனியமுதல், மும்மையுமோட்டிற் காட்டிலன்னையிற்காண் டுறவோரோர்தவர்க்கலான் முடியா.

அறைதலிற்கொல்லாநலத்ததுநோன்மை யெனவருடுற வுசாரகத்தா, டுமஃதுறவேசினமழுக்காறங் குருமையாற் கொடுஞ்சொல்கூறுமை, புறமுரையாமைமருவியவிரண்டாற் பொருவின்மெய்யுறுதியோர்க்குரைத்த, னிறைபெருந்தவத் தோர்வாக்கினிந்நான்குநிகழுமென்றியம்புவர்நெடியோர். (௬௦)

கான்றசோறதனிற்கண்டுபொய்ப்போக மனைத்தையுங் கைவிடுத்திடினுந், தோன்றுலகினைமெய்யெனக்கொடுமீக்கூற் றுறவிருப்படையினத்துறவோன், சான்றதாயுளதன்னுள மிலையெனவுந் தற்பரானந்தமுற்றவனைப், போன்றிருவிழிமேற்செருகியீண்டுரைக்கும் பொய்யையெவ்விதத்திஞற்போக்கும். (௬௧)

இத்திறனருள் கைப்பிடித்தெலாம் விடுத்தோ னேவலனொருவனேடுறினுஞ், சித்தசஞ்சலமுண்டவனொரோர்காலைச்செயுஞ்செயல்பிழைக்கினுட்சீற்றம், வைத்திடப்படுதலாற்ற னதுடற்பால் வந்தொருபிணியுறிற்றுணிவோ, டத்தனேயுளனென்றிருத்தலினிருத்தலரிதனேன்றனையுறினதனால். (௬௨)

யாதியாதொருவனீங்கியானேத லதனினலதனினிலனென், ஞேதலாலனைத்துந் துயர்தருமெனநீத் துயர்பரம் பொருளினைக்காட்டுந், நீதிலோர்குரவனெங்குளனெனவே தேடுமாலலைகடல்சூழும், பூதலமிசையோர்துறவினேனறவு பொலிமலர்தேடும்வண்டினைப்போல். (௬௩)

சமரமுற்றிடாதுபுறந்திரியொருவன் றனதெதிரடைதருபடைக்கைக், குமரரைநோக்கிமிகுபராக்கிரமங் கூறினுந்தேறலரதுபோ, லமர்தரத்துறவுசமாதியோதிடினுமவற்றினுக்கயனடையினரேற், றமரெனத்துணிவுற்றவரொடும்பழகார் தத்துவநிலைதலைப்படுவோர். (௬௪)

நீரிடத்தன்றியந்தரத்திடையே நிகழுமோர்மரையொனா விரும்பார், பாரிடத்தெவரும்வினோதிகள்சாலம் பண்ணலென்றெண்ணிமற்றதுபோர், சீருடைத்துறவுசமாதிபெற்றவரிற் றிகழினுமுயிர்க்கெலாஞ்சயவுஞ், சாருட்குருபத்தியுமிலார்தமையுந் தமரெனப்பழகவுந்தகுமே. (௬௫)

இதுநெறியெனவோரார்க்குமற்றொருவ னேகினுமாத்தன்மாக்குறிக, ளதுதனிற்காணுவிடத்துலகருபோ ரடிபெயர்த்திடலாதுபோ, லத்திறசமாதி யாதிபெற்றுடையோனென்னினுமுன்னவனுரைத்த, சதுர்மறையாகமாந்தரிந்தகறேற்றமென்னலவனையுந்தகுமே. (௬௬)

ஈங்கரைமுறையிற்றேர்ந்துபாரிதன்மீ தெங்கணுந்தேடிபோரிடத்தி, னெங்கருண்முதலநான்குமோர்வடிவா யுளதெனவுரையினிற்றுரைக, டாங்குறாவொடுஞ்செங்குவளைமார்பொடும்பொற் சரணொடுஞ்சரணெனவடைந்தோர், தீங்கொழித்தருள்வான்றிகழுமோர்குரவற் கண்டுளங்குளிர்ந்தனன்றெளிஞன். (௬௭)

காரியமாகலார்சகம்படைக்குங் காரணன்குலாலனினும்மனன், னேரியல்பெனவேற்கடலுமொன்றாக்கி யொப்பிடுங்கருணையனேனும், பேரியைபிறப்புத்தனையடைந்தவர்க்குப் பிணியுறுவகைகெடப்பார்க்குங், கூரியவிழியோனுதவி னறவுங்கொடியனுமாகுமக்குரிசில். (௬௮)

செப்பிருங்கைலைக்குருமுறைமையிற்றன் சிரமிசைச்சரணம்வைத்துளவோர், மெய்ப்பரனருளை நினைதொறுமுளந்திளெழுதுகல்லெனவுநகிடினு, மைப்பவந்துடைத்தன்பினர்க்குவீடளிக்கும் வல்லபமுடையமற்றொருதா, னொப்புமிச்சிவிடாகவினிறைபத்தி யுளனுமன்றுகுமவ்வும்பன். (௬௯)

கருடனைநினைவோர்பார்வையாற்பிறர்பாற்கடு வொழித்த லிற்றனைநினைவோ,ரொருவரைநோக்கினவர்களும்பாசமொழித்தல்செய்துறவொடேய்ந்தறிஞ, பருண்மகட்புணர்ந்துஞான சந்ததிபெற்றவரொடுமகிழ்ந்திருத்தலினக்,குருபரன்றன்னைப் பின்னைநேரில்லாக்குடும்பியென் றுரைக்கவும்படுமால். (௭௰)

குலவுசெங்கதிரோனிருளினையுணராக் கொள்கைபோற் றென்றுகாலுஞ், சொலுமறியாமையறிகிலாஞானத்தோன் றலேயெனினுமத்தூயோ,னிலகுமானந்தவுருவினை யனுக்கட் கீந்ததற்கிணையொருதுணையின், மலவுடலவர்பாற் கவர்தலி னிஃதோர்படைமைபெற்றுடையனுமாமால். (௭௧)

வதுவைநாண்மறையோர் வழங்கியாத்திரையின் மற்ற ருந்ததியைநோக்குதலி, னிதுவுமொன் றெனத்தம் முடல் பொருளாதி யீயுமெய்போலிகடமக்குங், குதிரைகொண்டிட வன் றடைந்துடலாதி கொடுத்தவன்போற்கொடுப்பவர்க்கும், பொதுமையுற்றிவனோர் *மானிடன்றனைய்த் திகழுமப்பூரண புராணன். (௭௨)

பாரினட்டாங்காதிகளொடக்குரவற் பலதரம்வலம்வந்து பணிந்து,சீரியதுதிசெய் தனுதினமவர்றற் றிருவுளத்தடைக் கவும் பட்டுத், தூரமோடணிமை யறவிறைகருணை சுரக்குமளவு நின்றேவ, லாரிவன் றனக்கொப் பெனச்செய்தொண்ச ரண்பெற்றறியவேண்டுவமுழுதறிந்தான். (௭௩)

சற்குருவருளாலயமுந்திரிவுந் தானறமறைமுடி வுணர்ந்த, பிற்குருபரன்றண்மூர்சரண்புகுந்த பெரியவரினமரீஇ யிருந்தொண், சொற்களினரிய பொருள்கடேர்ந் தவணந்

---

* மானுடன் என்றும் பாடம்,

தொலைத்தொருசிறிதுநாட்பின்னர்க், கற்குதலாதி யனைத்து நீத்தென்று ஞானசாதகத்தினுள்கழிப்பான். (எச)

அரும்பொறியின்மை பழியன்றியார்க்கு மறிவறிந்தாள் வினையின்மை, பெரும்பழியெனலா னொருவன்வீட் டின்பம் பெருமைகொடிகழ்கலர்பெரியோர், விரும்பஃதடையும் வகை யருட்குருவான் விளங்கியுமுளங்கையிற்கனிபோல், வரும்படி நாளு முயன்றுறுவென்போன் மதியிலார் தமையிகழ்வ தலால். (எரு)

பசர்தருதொழில்களனைத்துமோர்சிறிது பண்ணவேண் வெபணிவிடுத்துப், புகலுரையடக்கித்தனியிடத்திருந்து போ ற்றிசெய்தருட்குருபதம்பின், மிகமுயன்றிதய வருத்தமெய் தாமன் மெலிந்துகைவிடுதல்செய்யாம, லகமுகயாக்கிமனத் தைநாடொறுமோ ரைம் புலனொழித்தசைவறுப்பான். (எசு)

உச்சியம்போதின்மீதரும்பசிக்கவ்வூர்வலமாயிலந்தோறும் பிச்சையைகயிடையிற்காடிகூழேனும் பெற்றதுபற்றியுள்வெறு ப்போ,டிச்சையற்றருந்திப் பொருந்தவேகாந்தத் * திடையினுந் தாகம்வந்தடையி, னச்சிநீருரிற்புகுந்துறுதேரியாதியினருந்து தனன்றே. (எஎ)

ஞானசாதகன்மற் றுதயமாதியினு ணயக்கொணுமயக்க மாதலினு, மீனமார்விந்து மிகுமெனுவகன்றே ரிகழ்ந்துகை விடுத்தவாதலினுந், தானிரங்தொருபோழ் தருந்திடுமுணவுஞ் சமமலாற்றுழினும்கினு, மூனதாருடற்கனேயுறுமற்றைக்கு றக்கமுமிகுந்திடுமென்றே. (எஅ)

மிகுத்திடுமுனமிற் படுதழலவிப்பான் விடுபவன்கலங்க லீர்தெளிநீர், பகுத்திடானதுபோற்காடிசோறேனும் பசித்த

---

* இடையினும் என்றும் பாடம்.

வன்புசித்திடறகுமா, னகத்தவர்மனேதோ றுழன்றெனக்கடிசி
னல்கிடென்ருெருவன்வேட்டுணலா,னகத்துறுபசியும்போக்கி
மற்றதுகொ டதிகமென்பயனடைவானே. (எகூ)

எரிந்தெழுபசிநோய்தணிக்கவோர்மருந்தென் றேற்றுண
தொருவனுச்சுவைவேட், டருந்திடுமளவும் வருந்தியப்பிண்ட
மளித்தவர்தம்மைநோ வதுவென், னிருந்துளகிரக வாழ்க்கை
யும்பினைவந்தெய்தியதுறவும்மல்லதுவீண், டிரிந்துடல்வளர்த்தி
யெனத்தனைவிடுத்ததெய்வத்தைநோவதுமறந்தே. (அ0)

எய்தவனுறமற் றேவையென்னேவ தெனவுலகுரைத்த
லினெருதாஞ், செய்துளவினைக்குத்தக்கபேறிறைவன் சேர்
க்குதறனைமறந்தென்னே, வுய்தவமறியாக்கைதவரைய முத
விடார்தமையுதவினரை, வைதல்வாழ்த்திடுதல் செய்துமற்
றொருசாண் வயிறுநாடொறும்வளர்ப்பதுவே. (அக)

தன்னருகுறுசேய் சிரத்தொரங் குலியாற் றன்புடைத்
தொருவன்மீதொருவன், சொன்னபாத்திரத்தி னவனையச்
சேயுந் துணிவுகொடெழுந்தறைகுதல்போன், முன்னவன்வி
னையர்ட்டாயவைந்தொழிற்கு முன்னிலையாயசிவரைப்பார்த்,
தின்னல்செய்சாபமிட்டுமாதவரு மென்கொலோ தவமிழப்
பதுவே (அஉ)

பெண்ணைவிட்டகலாவொருவிடன்றன்னைப் பிறர்வழக்
கினிற்கொடுபோகக், கண்ணைவிட்டகலா தவள்வரல்போலு
ங்கண்டுகொண்டேகியாங்கஃதெவ், வண்ணமாயினுஞ்சீக்கி
ரத்தினின்முடித்தவ்வனிதைபான்மறிதரன்மானப், பண்ணி
யசமாதிவிடுத்தறிஞருந்தம்பசிதணித்ததையுறும்பரிசே. (அஙு)

நடந்துறங்கொருவன் றனைமலரமளி நண்ணுமாபுரியி
ன்மற்றவனுங், கிடந்துறங்குவதைக் குறித்துமுன்னுறக்கம்

விழித்தவாவிளக்குதல்போலுங், தொடர்ந்தொருகணமு மி டைவிடாஞான நிட்டரைத் தூயதஞ்சமாதி. யடைந்தனர் வி டுத்தாரென்பரேகாந்த மவர்க்கனுகூலமாதலினே. (அச)

நித்திரைதடைமீறிடிற்கைகால்போர்த்து நிசியிடைபூ வணைதுயில்வா, ரொத்துருவிடையிற் கிடையுமப்பயிக்க லூ ணுமெங்ஙனமிதமென்னி, லித்தஞாயோர்நித் திரை கிற்பா யு மெரிகொடும்பசிமிகிற்கறியுஞ், சித்தமேவேண்டாவென்ற சொல்லன்றோ தெரியுமோவவர்க்கவைமிகலான். (அரு)

தென்பரவையினுட் கழிவடபரவை சேர்நுகத் துளையி னிற்செலல்போ, லொன்பதிற்றென்பதோடுமூவிலக்க முள வியோனியும்பிழைத்தேறிப், பின்பிறப்பிதுபெற் றதனினும் பாதி பிறப்புருநாளதாக்குநரி, னின்பமீதெனமிக் குறங்கலர் பிறவிக் கறவெரீஇயுளந்துளங்கிடுவோர். (அசு)

அறவுநித்திரையைத்துறந்திடினுடற்க ணடைதரும் பி ணிகண்மற்றதனுற், குறைதலுமிகலு மின்றியோர் சமமாக் கொண்டுகண்டுயின் றுபின்விழிக்கி, லூறுசுகாதனத்தி லெழு துசித்திரமொத் துறைகுவரிறைதலைகழுத்துன், செறியுடல் வாங்காதோங்கநேரவர்பாற் சேருமோகாமநோய்சிறிதும். ()

உறக்கமும்பசியுமிகுந்திடிற்காம முற்றிடாதற்றபோழ் துள்ள, மிறக்குமொண்சமாதி யடைதலினடையா விடையி லுமடுபவத்துயரை, மறக்கலாமையினுலச்சமும்வீட்டைமதி த்தலாவிச்சையுமுடலை, வெறுக்குநிக்கிரகத்தாற்களிப்பறலு மேவலான்மேவிடாததுவே. (அஅ)

எங்குளபுனன்மற்றிதுகழீஇ யிடுதற் கென்றுகாலிடைப் படுமெசுத்தக், கங்குடல்குலையு மொருமகன்மலம்புக் காடவு

நாடுமேயதுபோர், பொங்குபுன்மலவூன்பொதியிதென்றெ ழிப்ப லெனவருவருத்துடல் பொறுக்குந், தூங்கபாதவர்கு மெங்ஙனமடவார்த் தோயவுநேயமுட்டோன்றும். (அகூ)

அருந்தவம்புரிவோ ரெதிருருவசிதா ஞதியமாதர்வந்து ள்ளம், வருந்திநின்றியாது புரியினுநோக்கார் மற்றிவணுற்ற மாதரையும், பொருந்துமோர்வெளின்மீ தேறவிட்டுளநாய் போனனிநோக்குமென்போல்வா, ரிருந்துளவிடத்தாங் கவ ர்வரின்விழியோ டென்படுமோபதைத்திதயம். (கூ0)

பெற்றதாய்முதலோர்ப்புரையமாதரையெண் பெருந்து றவடைந்துளோன்றவழுஞ், சிற்றெருமிளைத்தன்மனையென விளைதத் திறத்துரைப்பினுமுனங்கிரகத், துற்றநாடனதும கடனையவண முரைத்திடாமையிற்பழுதென்றூர், பொற்றொ டியவர்தோடழுவவும் விழைதல் புரியினென்னுங்கொலவ்வற மே. (கூக)

சிறந்தகற்புடையமாதரும்பரத்தை யருமலாத் தெரிவை யர்புவிமேற், பிறந்தநாட்பிறந்தான் போலுநெஞ்சகத்தைப் பிரிநடையுரியனுமொருவ, னிறந்த தன்னிச்சையெவணமவ்வ ண்ண மிகத்திலுஞ்செயப்படாதுடலைத், துறந்தகாலையிலுநர கில்வீழ்த்தியம தூதுவர்வருத்தலினன்றே. (கூஉ)

மைப்படுவிழியாரின்பமோர்முள்ளி மலரின்வாய்த்தே னையொப்பெனக்கண், டொப்பில் பேரின்பம்வேண்டினோன் வேண்டி யுலகர்வேறெவைகொடுத்திடினுந், துய்ப்பமற்றவ ப்பவிரண்டுமேயன்றித் தொடுவனோபிறிதிவற்றினுக்கூர், குப் பைசாரிடம்புக்கிடுதலினவற்றைக் குறித்தொரோரிடம்புகா மையினே. (கூங)

தனைகனியிரந்து வருந்திமற்றொருவன் சந்தனமாதியபூசி, யினமலர்மாலைபுனையினுமுனியாவிழுத்துவைதடித்துதைத்துடலிற், பினைமலமாதிபூசினுமன்னோன் பிரியமப்பிரியமொன்றின்றி, வினைவழிமுனைவனைந்தொழில்புரியும் விதத்தையேநோக்கியுண்மகிழும். (௩௪)

தந்தைதாய்பலமாதியகொடுத்திடவுந் தக்கைபுண்செவியிலுக்கிடவு, மைந்தவாவெனலுங் குதித்தெழுந்தோடி வருதல்போகுதல்செயுமகவி, னைந்தொழில்புரியு மெந்தையூழ்வழியீந் தருள்சுகமாதியவருங்காற், சிந்தையுள்விழைந்து முற்செலாதழிந்து பிற்செலார்மாசறத்தெளிந்தோர். (௩௫)

இத்தரையிடைப்பாழாயவாலயமற் றிருண்மிகு முடுக்கர்திகளிற், சுத்தமெய்த்தவரெப் பொழுதடைந் தறினுந் தோன்றுறாதச்சமங்கவர்பா, லத்தனிவ்வுடலைப் புரக்குஞான் றழிப்பா ரிலையவனேபினுமழிக்கின், வைத்திவண்புரப்பாரிலையெனுந்துணிவுமனத்தினுளிருத்தலினன்றே. (௩௬)

ஊனையோம்புதல்கைவிடுத்துனையுவப்பா ருணர்வரென் றுளுடைாம்பி, தானுரைத்தமையா லுடல்விழைந்திடினத் தத்துவநிலையுங்கைதவறி, யினமார்பிறப்புற் றிடுவினைந்தொழிற்கு மிறையதி காரியென்றெண்ணு, ஞானமொன் றனையே தொடருமோர்புருட னன்னுவன்பரகதிதிண்ணம். (௩௭)

உள்ளதுண்டாமற்றில்லதின்றெனவெண் காடரோதிடுதலினுறமூழ், தன்னொணுமையினெவ்விதத்தினு நுழைந்து தவம்புரிகாலையுனுயிரை, விள்ளல்செய்திடினு ஞானசாதகனுண் மேவுமவ்வாதனையொடும்போய்த், தெள்ளியபோகமுண்டுமீண்டடைவன் சிவமதுற்பவமதொன்றிரண்டில். (௩௮)

அருந்தவவிலக்கில் வுடற்பரிப்பதுதா னச்சமாதிகட்டரு மூலர், இருந்துநஞ்சிந்தைசிவன்கணேயாவர் வரினுமென் ற மையிற்பேதிப்பான், பொருந்தினும்வானேரெதிர்முதிர்கொ லேவெம்பூதமாதியவளேந்திடினு, மிருந்ததஞ்சமாதிக்கலேகுலே யாதோரெண்ணியவெண்ணியாங்கடைவர். (கக)

தேவர்மாமுனிவரசுரர்வாளரக்கர் சித்தர்வித்தியாதரர் முதலோர், யாவரும்விரும்பிச்சித்திபுத்திகளு மெட்டுணைய ச்சமாதியவுண், மேவுறுதகற்றித்தவம்புரிந்தடைந்தான் மே லதாமூலபண்டார, மோவறவவையே குடிகொளென்போ னெஞ்சுடையராலடையவும்படுமே. (கப0)

ஒருவனுக்கிருளற்றுரியசிற்சொரூப முள்ளவா விளங்கி னன்றறுமிப், பருவரலுருவப் பற்றுமற்றதுநேர் படுமளவி றைபுரிதருமைங், கருமமெவ்விடத்துங் கண்டுதற் செயலேக் கைவிடுத்தச்சமாதியவுண், மருவுறுதகற்றித் தவஞ்செயல்வ ழக்கால் வாழியெங்குரவனீடூழி. (கபக)

வைராக்கியதீபமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# அவிரோதவுந்தியார் மூலம்.

---

## பாயிரம்.

சமரபுரிமாநிம்பத் தண்ணிழற்பாலும்பல்
அமரர்தொழவிருந்த தன்றித் - திமிரமலம்
போக்கியெமதுள்ளின்பப் பூரணமாயெவ்விடத்துந்
தேக்கறிவுமாயிருந்த தேசு.

உலகமெலாமீன்ற வொருத்திதனப்பாலுண்
டிலகுகவிதைமழை யீச - னிலவு
புயமலைப்பாற்பெய்தசுகப் போரூர்வாழ்வானம்
புயமலர்த்தா ளென்முடிக்குப் போது.

பன்னெறியினிகல்விளைக்கும் பலசமயத்தவருமூச்சிடத் த்திர்கீது, நன்னெறியென் றுய்யவவிரோதவுந்தி யாமொரு நூ னல்கினனால், வென்னெறிதேர் மறைநெறியா கமநெறி யொன்றெனக்காட்டும் வீரசைவத், தொன்னெறியா சேச னெங்கள் சாந்தலிங்கதேசிகனுந் தூயன்றானே.

பாயிரமுற்றிற்று.

---

## நூல்.

எல்லாமுடையான் குருவாகியிங்கெம
தல்லலறுத்தானென் றுந்தீபற
அவன்றொழுவாமென் றுந்தீபற. (௧)

தவிராவிரோத சமயநூலன்றா
லவிரோதவுந்தியென் றுந்தீபற
ஆமிந்நூனாமமென் றுந்தீபற. (௨)

உருவுகண்டெள்ளா துளங்தேருமேலோர்
பொருணலந்தோராமு னுந்தீபற
புன்சொல்கண்டெள்ளாரென் றுந்தீபற. (௩)

அறம்பொருளின்பம்வீ டாயவோர்நான்கிற்
சிறந்தபயன்வீடென் றுந்தீபற
தேரின்வீடேயெலா முந்தீபற. (௪)

தாங்குபற்றற்ற சகலத்தியாகத்தி
னோங்குதருமமே துந்தீபற
உள்ளதுவீட்டிற்கஃ துந்தீபற. (௫)

பொன்றாப்பொருளே பொருளென்பர்நல்லோர
தன்றிப்பொருளியா துந்தீபற
அல்லனமாயையென் றுந்தீபற. (௬)

பூரணமும்மாம் பொருவிலானந்தக்கு
நேரியாதின்பம்வே றுந்தீபற
நீங்காச்சுகமதே யுந்தீபற. (௭)

ஆதலாற்பெற்ற வறிவாற்பெறும்பய
னோதும்வீடேயென வுந்தீபற
உண்மைநூல்யாவுமென் றுந்தீபற. (௮)

வீடுஞானத்தன்றி மேவொணுதாகையாற்
கூடுமோனந்தவாழ் வுந்தீபற
கோதின்மெய்ஞ்ஞானியென் றுந்தீபற. (௯)

யானெனதென்செருக் கீர்த்தமகனேமெய்ஞ்
ஞானியென்றோதிய வுந்தீபற
நான்மறையாதிய வுந்தீபற. (௧0)

தேகாதிநான்கலுட் டேககரணங்க
ளாகுமியானென்ப துந்தீபற
வலமற்றெனதென்ப துந்தீபற. (௧௧)

அழிதேகமன்னுயிர்க் கன்னியமேயேனும்
பழமோகத்தால்யானென் றுந்தீபற
பற்றுமையொற்றுமை யுந்தீபற. (௧௨)

விறகாரழல்போலுமின்னுர்பொன்னுதி
யுறகாறுபந்தமை யுந்தீபற
உள்ளக்கண்மாறுதென் றுந்தீபற. (௧௩)

நீக்காமுற்சூழ்காடு நீடெயிற்கொள்ளொணு
போக்கார்புறப்பற்றே லுந்தீபற
போமேயகப்பற்றென் றுந்தீபற. (௧௪)

புறப்பற்றெலாந்தூரப் போக்கிமீட்டெண்ணு
துறப்பற்றின்மெய்யுணர் வுந்தீபற
ஓடுமகப்பற்றென் றுந்தீபற. (௧௫)

வேண்டாதுறத்தலே மெய்யுணர்வென்பதொன்
றீண்டிடையூறதற் றுந்தீபற
எய்துமேலில்லையென் றுந்தீபற. (௧௬)

குடும்பபாரந்தலைக் கொண்டவர்க்கல்லல்
விடும்பரிசின்மையா லுந்தீபற
மெய்யுணர்வெங்ஙனு முந்தீபற. (௧௭)

கற்றழீஇமுந்நீர் கடந்தோருமுண்மையா
னிற்றழீஇமெய்யுணர் வுந்தீபற
எய்ந்தோருமில்லெனு ருந்தீபற. (௧௮)

எல்லோர்க்குங்காலன் றுறவீவனீடாமு
னல்லோர்துறப்பர்தா முந்தீபற
நன்றறிவார்களென் றுந்தீபற. (௧௯)

இருமையுண்மைவல்லோர்க் கிம்மெய்கொண்டம்மெய்
விரவினுய்ந்தெய்தலே யுந்தீபற
வேலையாசானையுற் றுந்தீபற. (௨௦)

மாய்க்குநோய்க்கன்றே மருந்திருவாரின்மா
றேய்க்குமோர்பக்குவற் குந்தீபற
தேசிகனுய்ச்சிவ முந்தீபற. (௨௧)

ஆன்றவாசான்சொன்மெய்ந் நூறன்னநுபவ
மூன்றுமொத்தாந்துணி வுந்தீபற
முத்திநெறியதென் றுந்தீபற. (௨௨)

வேதம்பல்பக்குவ மோர்ந்தொருவீட்டினுக்
கோதும்பல்லாற்ருனு முந்தீபற
உண்மைகண்டார்க்கேக முந்தீபற. (௨௩)

சாதிசமயங்கடம்மின்மா ளாதமெய்ப்
போதமாமோர்சுரத் துந்தீபற
போயினர்மீளாரென் றுந்தீபற. (௨௪)

வருணநெறிசார் மதத்தம்மதமெய்ப்
பொருளுணர்வூடிற முந்தீபற
பொன்றாதவொன்றேயென் றுந்தீபற. (௨௫)

ஒன்றோடொன்றுவ்வா மதங்களொன்றொன்றினாற்
பொன்றுவதில்லையே யுந்தீபற
பொய்யென்பதெத்தைநா முந்தீபற. (௨௬)

தோல்வியும்வெற்றியுஞ் சொன்மதங்கட்கெலாங்
காலபேதத்தினுண் டுந்தீபற
கருத்தன்செயலதென் றுந்தீபற. (௨௭)

வாதிகடங்களுக் கல்லான்மதங்களுக்
கோதார்வலியின்மை யுந்தீபற
ஓதியுணர்ந்தோரென் றுந்தீபற. (௨௮)

அறனுமோரா றவாதிதமென்கைதீ
தாறும்விளங்கலா னுந்தீபற
அளவிலளவைகொ டுந்தீபற. (௨௯)

சகலமுந்தேரினுந் தத்தமதநெஞ்
சகலாதுரத்தலி னுந்தீபற
அபலமியாதென்ப துந்தீபற. (௩0)

எல்லாச்சமயத் தியல்புமறிந்தவர்
நல்லாரவற்றுடென் றுந்தீபற
நீக்கிற்பழியாதென் றுந்தீபற. (௩௧)

உயர்ந்தநெறியீதென் றொன்றைவிட்டொன்றை
யிடைந்திடுவோனுமுண் டுந்தீபற
எதபடையானெனன் றுந்தீபற. (௩௨)

ஆதலான்மேலா நெறியடைந்தோர்க்கொரு
சாதிசமயமே துந்தீபற
சங்கற்பநாசரென் றுந்தீபற. (கூ௩)

நீங்காதெவற்றொடு நின்றாலுநெஞ்சிடைத்
தாங்கான்மெய்ஞ்ஞானியென் றுந்தீபற
சலமரையாதியொத் துந்தீபற. (கூச)

ஆறுநெறிக்கு மவிரோதபோதமே
தேறுமெய்ஞ்ஞானியென் றுந்தீபற
சித்தாந்தமாகும துந்தீபற. (கூரு)

சுருதிகள்சொல்பல் சமயத்துணிவுமப்
பரசிவபந்தமென் றுந்தீபற
பகர்நாமம்வேறுவே றுந்தீபற. (கூகா)

நிருமல்பூரண நித்தாதிநீங்கா
வொருபரந்தானுள துந்தீபற
உலகங்கடோற்றலா லுந்தீபற. (கூஎ)

பல்சித்திமுத்தி பராலடைதலாற்
றொல்சிவருமுள ருந்தீபற
சுதந்திரகீனரென் றுந்தீபற. (கூஅ)

பல்லுயிர்முத்தி யடைதலாற்பந்தமுஞ்
சொல்வரெல்லோருமென் றுந்தீபற
தொன்மையதுவுமென் றுந்தீபற. (கூகூ)

அஞ்ஞானமாயைகன் மம்பந்தமாமிவற்
றஞ்ஞானமோர்முத லுந்திபற
அன்றாகுமென்பரா லுந்திபற. (சய)

பல்லோர்துணிவும் பாதிமூன்றுந்தேர்த
லல்லால்வேறில்லேனு முந்தீபற
அவரவர்கொள்கைவே றுந்தீபற. (௬௧)

சிவபரமத்துவிதமென் றிண்சொலா
ரேறுவாதனைவரு முந்தீபற
ஒன்றிரண்டென்பரா லுந்தீபற. (௬௨)

ஒன்றெனின்வீடுமின் றுண்டேனும்லீலையாற்
பின்னையுஞ்சாருமென் றுந்தீபற
பெத்தமுத்தம்வீ டுந்தீபற. (௬௩)

ஆருமுயிர்பந்தத் தானதுமித்தையே
லேகவமலங்க ளுந்தீபற
எவ்வாறுளதாமென் றுந்தீபற. (௬௪)

ஓரிரண்டேவிறைக் குற்றகருணையார்
சேர்வரன்றேயின்று முந்தீபற
சேர்தலென்சீவர்வீ டுந்தீபற. (௬௫)

உதியாவிருளை யுதித்தவைகூட்டிப்
பதிபந்தஞ்செய்யுமே லுந்தீபற
பதிசத்தியென்னுமென் றுந்தீபற. (௬௬)

பந்தாந்தமூன்றும் பகர்வதல்லாலிவை
சிந்தித்துணரக்கொளு துந்தீபற
சித்தமும்பெத்தமா லுந்தீபற. (௬௭)

மின்மினிச்சோதியால் வீடிருட்கூடுவான்
றன்மைபோன்மாயைகொ டுந்தீபற
தத்துவந்தேர்வதென் றுந்தீபற. (௬௮)

ஆதலாற்பந்த மறுப்பான்மனேலய
சாதகஞ்செய்வனு ருந்திபற
தற்பரந்தோன்றுமா றுந்திபற. (சகூ)

உணர்ந்தோரனைத்துமா மோர்பொருடன்னை
யுணர்ந்தோரனைத்துமென் றுந்திபற
உள்ளங்கைநெல்லியீ துந்திபற. (ருo)

அந்நிட்டைநீயு மடைகுதர்கூ ளுயிர்ப்
பின்னத்தைமுன்னுணர்ந் துந்திபற
பேதைமைநீங்கிடென் றுந்திபற. (ருக)

ஓயுமாணுந்த காலத்திருத்துவெந்
தியடலானுமிங் குந்திபற
தேகநீதானல்லை யுந்திபற. (ருஉ)

உணர்வின்றிநாளு முறக்கத்தடைந்த
மணறுகராதானு முந்திபற
வாயுவுநீயல்லை யுந்திபற. (ருங)

ஒன்றுணர்போழ்தொன் றுணராமையானும்வே
றொன்றுணர்ந்தோதலா னுந்திபற
உணர்விந்தியங்களன் றுந்திபற. (ருச)

எனெனுவுமற்கு மியானெனதென்றபி
மானமிருத்தலா னுந்திபற
வாக்குநீதானல்லையுந்திபற. (ருரு)

ஆங்காரநிச்சயித் தப்புத்திப்றலா
ஞேங்குளனுன்மன முந்திபற
ஒன்றுநீயன்றிவற் றுந்திபற. (ருசா)

அறிவாளிினைவு மடங்கலாற்சித்த
மறிவன்றசித்தாலென் றுந்தீபற
அறிவுன்னுருவ மென்றுந்தீபற. (௫எ)

எங்குமாய்முத்தியி லீசனேடெய்தலான்
மங்காவுயிர்விபு வுந்தீபற
மற்றையகூறெனு துந்தீபற. (௫அ)

இந்தடைவானின் னியல்பைமறைத்தவப்
பந்தங்கள்போக்கநீக் குந்தீபற
பழவாதனையெலா முந்தீபற. (௫௯)

ஒட்டறமுத்தித் தடையாயுளவெலாம்
விட்டனையேலினி யுந்தீபற
மேவொண்சுகாசனந் துந்தீபற. (௬௰)

வாங்கிப்பொறியைந் தணின்றமனந்தனை
நீங்காதகத்திருந் துந்தீபற
நினைவுமெழாமலென் றுந்தீபற. (௬௧)

பதைத்தெழா துள்ளம் புதைப்பாய்பதைக்கில்
வதைப்பாயங்கங்கேயென் றுந்தீபற
மாயுமனப்பேயென் றுந்தீபற. (௬௨)

அசைவறச்சித்த மடங்குமேற்பின்ன
ரசையாமதற்காத்திடென் றுந்தீபற
அறிவால்வருந்தியு முந்தீபற. (௬௩)

ஆங்கறியாமையுஞ்சாராதறிவொடுந்
தூங்குவாய்காளுமென் றுந்தீபற
தோன்றும்பரம்பொரு ளுந்தீபற. (௬௪)

அந்தப்பாத்தோ டிரண்டற்றயிக்கமா
மந்தநன்னிட்டையே யுந்தீபற
அத்துவிதவீடேன்றுந்தீபற. (சுரு)

எம்மதத்தோரெவ் வகைநிட்டைசொல்லினுஞ்
சம்மதமேயெமக் குந்தீபற
தற்போதமாய்க்குமே லுந்தீபற. (சுசு)

நானற்றபோதத்தே நானனமுத்தியை
நானெனங்ஙனஞ்சொல்வ துந்தீபற
நான்மறைக்கெட்டாதென் றுந்தீபற. (சுஎ)

பெத்தர்க்கொருசிவ மின்மையிற்பேருண்
முத்தர்க்குலகுமின் றுந்தீபற
முழுதுஞ்சிவமாத லுந்தீபற. (சுஅ)

எல்லாஞ்சிவமேயென் றெண்ணினுநின்போத
மல்லாலஃதுண்மையன் றுந்தீபற
ஆங்கதுநீங்கிடேன் றுந்தீபற. (சுக)

பாவனாதீத நினைவின்மையுண்டெனிற்
பாவனையாகுமென் றுந்தீபற
பன்னூற்கருத்துமீ துந்தீபற. (எ0)

ஒன்றியகேவல மென்றேயுனத்தகுந்
துன்றிருளொன்றிலா துந்தீபற
சுத்தமிதாயதென் றுந்தீபற. (எக)

பாவனாதீதம் பதியாவிடத்தேக
பாவனைபற்றிநின் றுந்தீபற
பழுத்தாலொழித்திடேன் றுந்தீபற. (எஉ)

பாராதியெட்டுமெப் பாலுமெப்பாலுமா
யோர்சோதியேநின்றதுந்தீபற
உன்றுவேறில்லையென் றுந்தீபற. (எங)

உதித்தச்சிவத்தோடேய்ந் துள்ளதேன்மாயை
யதற்கன் னியமென்றுருந்தீபற
அதினன்குதீதியா துந்தீபற. (எச)

தோன்றமேல்யான்பிறர் தோன்றுஞ்சுகாதிக
டோன்றுமனில்லுயிர்க் குந்தீபற
சுதந்திரமின்மைதேர்ந் துந்தீபற. (எரு)

டைப்பாதிக்கீச னதிகாரிபற்று
துடற்காவனிவிடுத் துந்தீபற
ஒவாதவினைநோக் குந்தீபற. (எசு)

இரும்பூரணநின் மலன்வினையெல்லா
மொருங்குணர்ந்தூட்டுமே லுந்தீபற
உண்றொழிப்பதா ருந்தீபற. (எஎ)

உறும்பொழுதவ்வீ டொருதன்னுழப்பா
னறும்பிறர்யானென்பொ யுந்தீபற
அல்லொன்றினுமாறு துந்தீபற. (எஅ)

இப்பாவனூசிட்டை மாயோகமீசற்கீ
தொப்பின்மாபூசையு முந்தீபற
உண்மையைக்கூட்டுமென் றுந்தீபற. (எகூ)

கொள்ளரிதேலக் குறியெமதிவ்வுரு
வுள்ளத்தினுள்ளேவைத் துந்தீபற
ஒங்காரமுச்சரி யுந்தீபற. (அ0)

அஞ்சுமூன்றஞ்சக்க ராதியேதேனுநின்
வஞ்சமறுத்தோதென் றுந்தீபற
மனமிட்டமானவொன் றுந்தீபற. (அக)

மந்திரநிட்டையின் றேல்வாயுவாதியாற்
சிந்தைதுய்தாவதற் குந்தீபற
செய்யோகமாதிய வுந்தீபற. (அ௨)

அயனாதிமூவரு மாங்கவர்தம்ம
தியைதருவேடமு முந்தீபற
எல்லாமுமியாமெம துந்தீபற. (அ௩)

எத்தேவைநாமென் றிசைந்தாயதைத்தொழு
சத்தியபத்தியா லுந்தீபற
தனுவாதியைக்கொடுத் துந்தீபற. (அ௪)

நெய்யின்றியாக முடியுமேனீடுபே
ரைவகையாகமு முந்தீபற
அன்பின்றியாகுமென் றுந்தீபற. (அ௫)

அஞ்சிவக்கன்புறு தைம்புலக்கோடுமே
னெஞ்சிற்கறிவுறுத் துந்தீபற
நீதுணையல்லையென் றுந்தீபற. (அ௬)

அசுணாதிக்கோரொன்று லைம்புலனானு
மிசையுமேற்கேடெடய்க் குந்தீபற
எங்ஙனமுய்துமென் றுந்திபற. (அ௭)

ஆயிழையார்பாலுண் டைம்புலவேட்கையு
நீவிரும்பிற்கேடென் றுந்தீபற
நெஞ்சமேசொல்வதென் னுந்தீபற. (அ௮)

சிலந்திவருடத் திகழுஞ்சுகம்போ
லிலங்கிலழையார்சுக முந்தீபற
இடாய்விளையுமென் றுந்தீபற. (அக)

ஆன்பாலுங்கூழு மகற்றும்பசியெலாந்
தான்பின்மலமாமென் றுந்தீபற
சவிரசந்தேடேலென் றுந்தீபற. (கூ0)

வேண்டாததுன்பமு மேவல்போலின்பமும்
வேண்டாவிடினுமுண் டுந்தீபற
விதிவழிநெஞ்சேயென் றுந்தீபற. (கூக)

சொன்னவிந்நாறு வுபாயங்கொடுதொடர்ந்
தன்னமெய்ந்நிட்டைசேர்ந் துந்தீபற
ஆனந்தம்பெற்றிடென் றுந்தீபற. (கூஉ)

நினைவெழின்மெய்ந்நிட்டை நீங்குமேன்மானு
பினையெழினன்றுமென் றுந்தீபற
பேச்சுந்தொழிலுமென் றுந்தீபற. (கூ௩)

ஆனந்தமெய்தினோ ராடினும்பாடினு
மானந்தலீலையென் றுந்திபற
அவர்செயல்கூறொணா தந்தீபற. (கூச)

சோறிடநாடுந் துணிதரக்குப்பையு
மாறினோர்க்குள்ளவா லுந்தீபற
ஆங்கவைக்கென்றாரென் றுந்தீபற. (கூரு)

செல்லுழிக்கண்ட சிதைவலோடுங்கையு
நல்லகலமவர்க் குந்தீபற
காட்டிலேதற்றுண்பதற் குந்தீபற. (கூசு)

கொந்தமான தலமிலம்பூவணை
யாகுந்தரையவர்க் குந்தீபற
ஆனந்தரித்திரைக் குந்தீபற. (கூஎ)

ஒருபரமல்ல தொருவரைக்காணு
தொருதவர்க்குண்டுகொல் லுந்தீபற
உறவும்பகையுமென் றுந்தீபற. (கூஅ)

ஆண்டகையீசனை யன்றியொன்றின்மையால்
வேண்டியசெய்வாரென் றுந்திபற
விதிரிடேதங்களற் றுந்தீபற. (கூகு)

ஒங்கருளீசனே டொன்றியேநின்றேரு
மீங்கருணீங்காரென் றுந்திபற
எல்லாவுயிர்க்குமென் றுந்தீபற. (கoo)

அவிரோதவுந்தியார்-முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

ஆனந்தமோனம்வருமாசையறுமெப்பொருளு
மோனந்தரிட்டையெனமுன்னம்வரும் - தேனந்து
முந்தியார்நூறுமிகு மூகத்தோடேபடித்த
புந்தியார்க்கிதேபொருள்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சொரூபவுந்தியார் மூலம்.

காப்பு.

கிஞ்சின்விரிவாகிக் கீழ்யேனடுவாகி
நெஞ்சிலறிவரிய நிண்ணயமாய் - மிஞ்சியருள்
உள்ளபொருள்சிற்சொருப வுந்தியாரைப்பாடிற்
கள்ளமறப்போக்குவிக்குங் காண்.

நூல்.

சொல்லற்கரிய சொரூபநன்னிட்டருக்
கல்லற்பிறப்பேதென் றுந்தீபற
வவர்சருவேசரென் றுந்தீபற. (௧)

ஏகசிதாகாச வெல்லைகடந்தவர்
மோகமிறந்தாரென் றுந்தீபற
முத்தரவரேயென் றுந்தீபற. (௨)

காட்சிக்கெட்டாதொன்றைக் கண்டுதெளிவார்க்குத்
தாட்சியணுகாதென் றுந்தீபற
தானவனாகுமென் றுந்தீபற. (௩)

எட்டப்படாதொன்றை யெட்டிக்கொண்டார்களுக்
கெட்டப்படாததின் றுந்தீபற
யெல்லாமவரேயென் றுந்தீபற. (௪)

தன்னுருக்கண்டு தனிப்பட்டஞானிக்குப்
பின்னுருவில்லையென் றுந்தீபற
பேதமிறந்ததென் றுந்தீபற. (௫)

நித்தியானந்த நிலையறிவாருக்குச்
சத்தியந்தானுமென் றுந்தீபற
சாந்தசொரூபரென் றுந்தீபற. (௬)

எல்லாமிறந்த விடங்குருவாங்குரு
சொல்லாமற்சொன்னதென் றுந்தீபற
சுத்தவெளியதென் றுந்தீபற. (௭)

சுட்டுதலற்றுத் துரியமிறந்தபின்
கட்டுக்குலைந்ததென் றுந்தீபற
காவலாகாசமென் றுந்தீபற. (௮)

கண்டதுசிற்சத்தி கொண்டதுதாஞ்சிவ
நின்றதுமிச்சமென் றுந்தீபற
நின்மலவாகாச முந்தீபற. (௯)

தர்ப்பணச்சாயல்போற் சைதன்னியந்தன்னி
லிப்பிரபஞ்சமென் றுந்தீபற
வில்லையிதுவென்றே யுந்தீபற. (௧0)

சித்துத்தானென்று சித்தேசகமாக்கண்டோர்
சத்துத்தானென்றவ ருந்தீபற
சங்கையிறந்தாரென் றுந்தீபற. (௧௧)

நானென்றிருந்தா னின்னுனென்றறிந்தபின்
றானென்றுகண்டாரென் றுந்தீபற
சந்தேகந்தீர்ந்தாரென் றுந்தீபற. (௧௨)

ஆங்காரங்கெட்டு நிராங்காரப்பட்டபின்
போங்காரங்கெட்டதென் றுந்தீபற
வுள்ளதேயுள்ளதென் றுந்தீபற. (௧௩)

தோற்றுவதெல்லாஞ் சுபாவமெனக்கண்டோர்
சாற்றும்வகையேதென் றுந்தீபற
தன்னையிழந்தாரென் றுந்தீபற. (கரு)

ஆசனங்கண் டிருந்தமெய்ஞ்ஞானிக்கு
யோகாசனமேதென் றுந்தீபற
ஒடுங்கிற்றுவையமென் றுந்தீபற. (கரு)

தன்னைச்சுபாவ வறிவென்றறிந்தவர்
பின்னைப்பிறவாரென் றுந்தீபற
பேச்சுக்கிடமற்ற துந்தீபற. (கசு)

பஞ்சகோசத்தைப் பகுத்தறிந்தோருக்கு
நெஞ்சமிறந்ததென் றுந்தீபற
நிட்டையதாகுமென் றுந்தீபற. (கஎ)

ஆத்துமதத்துவ மாந்தன்னைக்கண்டபின்
கோத்துநிறைந்ததென் றுந்தீபற
குறையவர்க்கில்லையென் றுந்தீபற. (கஅ)

அந்தக்கரண மறிந்துதுறப்பார்க்குப்
பந்தமிறந்ததென் றுந்தீபற
பாழ்வெளியுள்ளதென் றுந்தீபற. (கக)

சத்தமிறந்த தலந்தனிற் கண்டபின்
புத்தியிறந்ததென் றுந்தீபற
போதமிறந்ததென் றுந்தீபற. (உ0)

தேகாதியன்றெல்லாஞ் சித்தெனக்கண்டோர்க்கு
மோகாதியில்லையென் றுந்தீபற
முத்திநிலையதென் றுந்தீபற. (உக)

ஏகநிராமயமென் றறிஞானிக்குத்
தாகமிராதுபின் னுந்தீபற
தன்னனுபோகமென் றுந்தீபற. (உஉ)

சொல்லறநின்ற சுகாதீதஞானிக்கு
இல்லறமற்றதென் றுந்தீபற
ஏகசிதாகாச முந்தீபற. (உங)

எல்லாம்பரமாத்த மென்றறிஞானிகள்
சொல்லாரவருண்மை யுந்தீபற
சொன்னாற்றெரியுமென் றுந்தீபற. (உச)

ஐயமிறந்தறி வானந்தமுற்றபி
னுய்யப்பதமேதென் றுந்தீபற
வுண்மையதாகுமென் றுந்தீபற. (உரு)

துச்சமன்றித்துச்சந் தானென்றுகண்டபி
னச்சமிறந்ததென் றுந்தீபற
வறிவானந்தமாயிற்றென் றுந்தீபற. (உசு)

ஆனந்தங்கெட்டு நிரானந்தமானபின்
னானந்தமானதென் றுந்தீபற
தடையற்றுநின்றதென் றுந்தீபற. (உஎ)

கூடல்பிரிதல் குவிதலற்றோர்நெஞ்சு
நாடல்பிறிதேதென் றுந்தீபற
நானற்றபோதமென் றுந்தீபற. (உஅ)

எல்லாஞ்சுகவடிவென் றறிஞானிக்கு
எல்லாஞ்சுகமேதென் றுந்தீபற
இச்சையிறந்ததென் றுந்தீபற. (கூஉ)

பற்றறப்பற்றிப் பதைப்பற்றநெஞ்சருக்
குத்தரமற்றதென் றுந்தீபற
வொப்பனையற்றதென் றுந்தீபற. (ருO)

உண்டில்லையென்ற வுருவத்திடையொன்றைக்
கண்டதுமிச்சமென் றுந்தீபற
ககனவடிவமென் றுந்தீபற. (ருக)

ஒப்பற்றவொன்றை யுணர்ந்தமெய்ஞ்ஞானிக்குச்
செப்பத்தகுவதென் றுந்தீபற
சித்தேபிரமமென் றுந்தீபற. (ருஉ)

சிற்கனத்தோன்றிச் சேர்ந்தமெய்ஞ்ஞானிநெஞ்
சொக்கவிறந்ததென் றுந்தீபற
வுணர்வொன்றிருந்ததென் றுந்தீபற. (ருரு)

உன்னுதிருந்த விடம்பொருளாமெனச்
சொன்னனருங்குரு வுந்தீபற
சும்மாவிருக்கவென் றுந்தீபற. (ருச)

நினைத்துணையன்றி யில்லைநானற்றபின்
பினைத்துணைகாணேனென் றுந்தீபற
பெரியமவுனமீ துந்தீபற. (ருரு)

மெய்ம்மைமெய்யென்று விரித்தறிஞானிக்குச்
செய்யகருமமே துந்தீபற
சிவன்சிவமென்றே யுந்தீபற. (ருசு)

சித்தப்பிரமை தெளிந்தநன்னிட்டர்கள்
சுத்தப்பிரமமென் றுந்தீபற
சொல்லொணுதானந்த முந்தீபற. (ருஎ)

சித்துருத்தானாய்த் தெளிந்தமெய்ஞானிக்குச்
சத்துருவில்லையென் றுந்தீபற
சஞ்சலமற்றதென் றுந்தீபற. (கூ௯)

பூரணமொன்றே புராதனமானதென்
றாரணஞ்சொன்னதென் றுந்தீபற
வாசானுஞ்சொன்னதென் றுந்தீபற. (கூக)

முத்துநன்னீரு முயங்கியிருந்தாற்போ
லெத்திசையொன்றேயென் றுந்தீபற
ஏகசித்தாகுமென் றுந்தீபற. (சூ0)

கள்ளமனச்செயல் கண்டுதெளிந்தபின்
வெள்ளவெளியேயென் றுந்தீபற
வேதமுடிவதென் றுந்தீபற. (சூக)

இருந்தவடிவேகண் டிருந்தமெய்ஞ்ஞானி
பொருந்தும்பயமேதென் றுந்தீபற
போக்குவரவற்றதென் றுந்தீபற. (சூ உ)

மிச்சமாய்நின்ற வெளிசிவமாக்கண்டோ
ரச்சம்பின்னேதங்கே யுந்தீபற
வாகாரமற்றதென் றுந்தீபற. (சூ௩)

நெய்யறமாண்ட நிலைவரைத்திபம்போற்
கையறமாண்டதென் றுந்தீபற
காணாப்பெருமையென் றுந்தீபற. (சூச)

சித்துஞ்சடமுஞ் சிதைந்தவிடந்தனிற்
சந்துந்திசையொன்றே யுந்தீபற
சகசமதாகுமென் றுந்தீபற. (சூரு)

நீநானெனுஞ்சட பேதமிறந்தபின்
ஞானமிருந்ததென் றுந்தீபற
தாரகமானோமென் றுந்தீபற. (௪௬)

சரித்துஞ்சரியா திருந்தபிரமம்
விரித்தபரியாய மூந்தீபற
மெய்யறிவொன்றேயென் றுந்தீபற. (௪௭)

நிர்க்குணநின்மல நின்மயமானபின்
னெக்குணங்கெட்டதென் றுந்தீபற
வெல்லைபின்னில்லையென் றுந்தீபற. (௪௮)

ஆகாசமென்னவசையாவடிவொன்றே
சாகாதிருந்ததென் றுந்தீபற
சத்தியமேயீதென் றுந்தீபற. (௪௯)

சொற்பிரகாச சொரூபந்தலைப்படின்
நிஷ்பிரபஞ்சமென் றுந்தீபற
நீங்காச்சிவோகமென் றுந்தீபற. (௫௰)

சொரூபவுந்தியார் - முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.

---